யூனென நின்ற வுணர்விலே னெனினு
முன்றிருக் கோயில்வந் தடைந்தா
லேனெனக் கேளா திருந்தனை யையோ
வீ துநின் றிருவருட் கியல்போ

பண்ணினு னிசையே பாலினுட் சுவையே
பத்தர்கட் கருள்செயும் பரமே
மண்ணினி லோங்கி வளம்பெறு முல்லை
வாயில்வாழ் மாசிலா மணியே
பெண்ணினும் பேதை மதியினே னெனினும்
பெருமநின் னருள்பெற லாமென்
றெண்ணிவந் தடைந்தாற் கேள்வி யில்லாம
லிருப்பதுன் றிருவருட் கியல்போ

நல்லவர் பெறுநற் செல்வமே மன்றுண்
ஞானநா டகம்புரி நலமே
வல்லவர் மதிக்குந் தெய்வமே முல்லை
வாயில்வாழ் மாசிலா மணியே
புல்லவ னெனினு மடியனே னையா
பொய்யல வுலகறிந் ததுநீ
யில்லையென் றாலும் விடுவனோ சும்மா
விருப்பதுன் றிருவருட் கியல்போ

திருச்சிற்றம்பலம்.

---

# திருவிண்ணப்பம்.

திருமுல்லைவாயில்.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லை வாய்ந்த செழுங்கனி யேதிரு
முல்லை வாயின் முதற்சிவ மூர்த்தியே
தொல்லை யேயுன்றன் றாய்திருக் கோயிலி
னெல்லை சேரவின் றெத்தவஞ் செய்ததே

திருச்சிற்றம்பலம்.

## காட்சிப்பெருமிதம்

திருவலிதாயம்.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வேலை கொண்ட விடமுண்ட கண்டனே
மாலை கொண்ட வளர்வல்லி கேசனே
பாலை கொண்ட பராபர நீபழஞ்
சேலைகொண்ட திறமிது வென்கொலோ.

கடுத்த தும்பிய கண்டவ கண்டனே
மடுத்த நற்புகழ் வாழ்வல்லி கேசநீ
தொடுத்த கந்தையை நீக்கித்துணிந்தொன்றை
யுடுத்து வாரிலை யோவிவ் வுலகிலே.

திருச்சிற்றம்பலம்.

## கோடைமடப்புகழ்ச்சி.

### திருவொற்றியூர்

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

---

வெள்ளி மாமலை வீடென வுடையீர்
விளங்கும் பொன்மலை வில்லெனக் கொண்டீர்
வள்ளி யீரென நும்மைவந் தடைந்தால்
வாய்தி றந்தொரு வார்த்தையுஞ் சொல்லீ
ரெள்ளி லெண்ணெய்போ லெங்கணு நின்றீ
ரேழை யேன்குறை யேனறி யீரோ
வொள்ளி யீருமை யன்றியொன் றறியே
னேங்கு சீரொற்றி யூருடை யீரே.

கல்லை யும்பசும் பொன்னெனப் புரிந்த
கருணை கேட்டுமைக் காதலித் திங்கு
வல்லை வந்துநின் றேற்றிடிற் சிறிதும்
வாய் திறந்தொரு வார்த்தையுஞ் சொல்லீ
ரில்லை நீர்பிச்சை யெடுக்கின்றீ ரேனு
மிரக்கின் றோர்களு மிட்டுண்பர் கண்டீ
ரொல்லை யிங்கென துளங்கொண்ட தறிவீ
ரோங்கு சீரொற்றி யூருடை யீரே.

தாயி லாரென நெஞ்சகந் தளர்ந்தேன்
தந்தை யுந்திருச் சந்நிதி யடைந்தேன்
வாயி லாரென விருக்கின்றீ ரல்லால்
வாய்தி றந்தொரு வார்த்தையுஞ் சொல்லீர்

கோயி லாகவென் னெஞ்சகத் தமர்ந்த
குணத்தி னீரென்றன் குறையறி யீரோ
வோயி லாதுநற் றொண்டருக் கருள்வா
னோங்கு சீரொற்றி யூருடை யீரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

திருவருள் வேட்கை.

திருவொற்றியூர்.

கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்.

மன்னமுதா முன்றாள் வழுத்துகின்ற நல்லோர்க்கே
யின்னமுத மோர்பொழுது மிட்டறியே னாயிடினு
முன்னமுதா வுண்டகள முன்னிமுன்னி வாடுகின்றே
னென்னமுதே யின்னு மிரக்கந்தான் றோன்றாதோ

ஊர்மதிக்க வீணி லுளறுகின்ற தல்லதுநின்
சீர்மதிக்க நின்னடியைத் தேர்ந்தேத்தே னாயிடினுங்
கார்மதிக்கு நஞ்சமுண்ட கண்டநினைந் துள்குகின்றே
னேர்மதிக்கு மொற்றியூ ரெந்தையளி யெய்தாயோ

தாய்க்குமினி தாகுமுன்றன் றாண்மலரை யேத்தாது
நாய்க்குங் கடையாய் நலிகின்றே னாயிடினும்
வாய்க்குமுன்றன் சந்நிதிக்கண் வந்துவந்து வாடுகின்றேன்
றாய்க்குமரன் றந்தாயென் சோர்வறிந்து தீராயோ

திருச்சிற்றம்பலம்.

---

## அபராதவிண்ணப்பம்.

### திருவொற்றியூர்.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தேவிய லறியாச் சிறியனேன் பிழையைத்
திருவுளத் தெண்ணிநீ கோப
மேவியிங் கையோ கைவிடிற் சிவனே
வேறுநான் யாதுசெய் வேனே
மூவிரு முகஞ்சேர் முத்தினை யளித்த
முழுச்சுவை முதிர்ந்தசெங் கரும்பே
சேவின்மே லோங்குஞ் செழுமணிக் குன்றே
திருவொற்றி யூர்மகிழ் தேவே

நாணமொன் றில்லா நாயினேன் பிழையை
நாடிநின் றிருவுளத் தடைத்தே
வீணனென் றையோ கைவிடிற் சிவனே
வேறுநான் யாதுசெய் வேனே
காணநின் றடியர்க் கருடரும் பொருளே
கடிமதி லொற்றியூர்க் கரசே
பூணயிற் கரத்தோர் புத்தமு தெழுந்த
புண்ணியப் புனிதவா ரிதியே

துரும்பினேன் பிழையைத் திருவுளத் தடையேற்
றுய்யநின் னருட்கட லாட
விரும்பினே னையோ கைவிடிற் சிவனே
வேறுநான் யாதுசெய் வேனே
கரும்பினேர் மொழியா ளிருவரை மணக்குங்
கனிதனை யளித்தகற் பகமே

விரும்பினேர் நெஞ்ச ரெனினுமென் போல்வார்க்
கின்னரு டருமொற்றி யிறையே.

திருச்சிற்றம்பலம்.

---

## அறிவரும் பெருமை.

### திருவொற்றியூர்

### எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

நாயினுங் கடையே னென்செய்வேன் பிணியா
னலிகின்ற நலிவினை யறிந்துந்
தாயினு மினியா யின்னுநீ வரவு
தாழ்த்தனை யென்னெவென் றறியேன்
மாயினு மல்லால் வாழினு நினது
மலரடி யன்றியொன் றேத்தேன்
காயினு மென்னைக் கனியினு நின்னைக்
கனவினும் விட்டிடேன் நானே.

கரைபடா வஞ்சப் பவக்கட லுழக்குங்
கடையனேன் நின்றிரு வடிக்கு
விரைபடா மலர்போ லிருந்துழல் கின்றேன்
வெற்றனே னென்செய விரைகேன்
றிரைபடாக் கருணைச் செல்வவா ரிதியே
திருவொற்றி யூர்வளர் தேனே
யுரைபடாப் பொன்னே புரைபடா மணியே
யுண்ணுதற் கினியநல் லமுதே.

திருச்சிற்றம்பலம்.

---

## எழுத்தறிபெருமான் மாலை.

திருவொற்றியூர்

கொச்சகக் கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

சிந்தை மயங்கித் தியங்குகின்ற நாயேனை
முந்தை வினைதொலைத்துன் மொய்கழற்கா ளாக்காதே
நிந்தை யுறுநோயா னிகழவைத்த நீதியதோ
வெந்தைநீ யொற்றி யெழுத்தறியும் பெருமானே. (க)

மைப்படியுங் கண்ணார் மயலுழக்கச் செய்வாயோ
கைப்படிய வுன்றன் கழல்கருதச் செய்வாயோ
விப்படியென் றப்படியென் றென்னறிவே னுன்சித்த
மெப்படியோ வையா வெழுத்தறியும் பெருமானே. (உ)

தீதறிவே னன்கணுவுஞ் செய்யேன்வீ ணாட்போக்கும்
வாதறிவேன் வஞ்சகனேன் வல்வினையேன் வாய்மையிலேன்
சூதறிவேன் மாலயனுஞ் சொல்லரிய நின்பெருமை
யாதறிவே னையா வெழுத்தறியும் பெருமானே. (ங)

சங்குடையான் றாமரையான் றன்முடியுங் காண்பரிதாங்
கொங்குடைய கொன்றைக் குளிர்சடையாய் கோதையொரு
பங்குடையா யேழைமுகம் பாராது தள்ளிவிட்டா
லெங்கடைவே னையா வெழுத்தறியும் பெருமானே. (ச)

உண்ணாடும் வல்வினையா லோயாப் பிணியுழந்து
புண்ணாக நெஞ்சம் புழுங்குகின்றேன் புண்ணியனே
கண்ணாளா வுன்றன் கருணை யெனக்களிக்க
வெண்ணாயோ வையா வெழுத்தறியும் பெருமானே. (ரு)

மன்னளவிற் சோதி மணிபோல்வாய் மாதவத்தோர்
தென்னளவும் வேணிச் சிவனே யெனவொருகாற்
சொன்னளவிற் சொன்னவர்தந் துன்பொழிப்பா யென்பாது
வென்னளவிற் காணே னெழுத்தறியும் பெருமானே. (சு)

மின்போல்வா ரிச்சையினால் வெம்புகின்றே னானாலும்
தன்போல்வா யென்னீன்ற தாய்போல்வாய் சார்ந்துரையிப்
பொன்போல்வாய் நின்னருளிப் போதடியேன் பெற்றேனே
லென்போல்வா ரில்லை யெழுத்தறியும் பெருமானே. (எ)

பூமாந்தும் வண்டெனநின் பொன்னருளைப் புண்ணியர்க
டாமாந்து நின்னடிக்கீழ்ச் சார்ந்துநின்றா ரையோநான்
காமாந்த காரமெனுங் கள்ளுண்டு கண்மூடி
யேமாந்தே னெற்றி யெழுத்தறியும் பெருமானே. (அ)

பன்னருமிப் பார்நடையிற் பாடுழன்ற பாதகனேன்
றுன்னியநின் பொன்னடியைச் சூழாதே னாயிடினும்
புன்னிகரேன் குற்றம் பொறுக்கப் பொறுப்புனக்கே
யென்னருமைத் தாய்நீ யெழுத்தறியும் பெருமானே. (கூ)

வீட்டுக் கடங்கா விளையாட்டுப் பிள்ளையெனத்
தேட்டுக் கடங்காத தீமனத்தா லாந்துயரம்
பாட்டுக் கடங்காநின் பத்தரடிப் புகழ்போ
லேட்டுக் கடங்கா தெழுத்தறியும் பெருமானே. (கO)

பன்னு மனத்தாற் பரிசிழந்த பாதகனேன்
றுன்னுமல வெங்கதிரோன் சூழ்கின்ற சோடையினா
னின்னரு ணீர்வேட்டு நிலைகலங்கி வாடுகின்றே
னின்னு மறியாயோ வெழுத்தறியும் பெருமானே. (கக)

பொன்னைமதித் தையாவின் பொன்னடியைப் போற்றாத
கன்னிகரு நெஞ்சாற் கலங்குகின்ற கைதவனே
னின்ன லுழக்கின்ற வேழைகட்கு மேழைகண்டா
யென்னை விடாதே யெழுத்தறியும் பெருமானே. (கஉ)

வெங்கொளித்தேள் போன்ற வினையால் வெதும்பிமன
மங்கொளிக்கா துன்னை யழைத்தழுது வாடுகின்றே
னிங்கொளிக்கா நஞ்சமுண்ட வென்னருமை யப்பாநீ
யெங்கொளித்தா யொற்றி யெழுத்தறியும் பெருமானே(கங)

ஒல்லையே நஞ்சனைத்து முண்ட தயாநிதிநீ
யல்லையோ நின்றிங் கயர்வேன்முன் வந்தொருசொற்
சொல்லையோ வொற்றியூர்த் தூயதிருக் கோயிலுணீ
யில்லையோ வையா வெழுத்தறியும் பெருமானே. (கச)

திருச்சிற்றம்பலம்.

---

## நெஞ்சொடு நேர்தல்.

### திருவொற்றியூர்.

### க லி வி ரு த் த ம்.

திருச்சிற்றம்பலம்.

வேண்டு நெஞ்சமே மேவி யொற்றியூ
ராண்டு நின்றரு ளரசின் பொற்பதம்
பூண்டு கொண்டுளே போற்றி நிற்பையேல்
யாண்டுந் துன்பநீ யடைத லில்லையே.

திருச்சிற்றம்பலம்.

---

# திருப்புகழ்விலாசம்.

## திருவொற்றியூர்.

### எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஏல வார்குழ லாளிடத் தவனே
யென்னை யாண்டவ னேயென தரசே
கோல மாகமா லுருக்கொண்டுங் காணுக்
குரைக ழற்பதக் கோமளக் கன்றே
ஞால மீதிலெம் போல்பவர் பிழையை
நாடி டாதரு நற்குணக் குன்றே
சீல மேவிய தவத்தினர் போற்றத்
திகழு மொற்றியூர்ச் சிவபெருமானே.

ஆறு வாண்முகத் தமுதெழுங் கடலே
யயனு மாலுநின் றறிவரும் பொருளே
யேறு மீதுவந் தேறுமெம் மரசே
யெந்தை யேயெமை யேன்றுகொள் ளிறையே
வீறு கொன்றையஞ் சடையுடைக் கனியே
வேத நாறிய மென்மலர்ப் பதனே
தேறு நெஞ்சினர் நாடொறும் வாழ்த்தத்
திகழு மொற்றியூர்ச் சிவபெருமானே.

காட்டு முப்புர நகைத்தெரித் தவனே
நண்ணி யம்பல நடஞ்செயும் பதனே
வேட்டு வெண்டலைத் தார்புனைந் தவனே
வேட னெச்சிலை விரும்பியுண் டவனே

கோட்டு மேருவைக் கோட்டிய புயனே
குற்ற மூன்றுண மாக்குறிப் பவனே
நீட்டு மெய்ப்புகழ்த் திசைபரந் தோங்கத்
திகழு மொற்றியூர்ச் சிவபெருமானே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருசாதனத் தெய்வத்திறம்.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உடையாயுன் னடியவர்க்கு மவர்மேற்பூண்ட
வொண்மணியாங் கண்மணிக்கு மோங்குசைவ
வடையாள மென்னவொளிர் வெண்ணீற்றுக்கு
மன்பிலே னஞ்சாம லந்தோ வந்தோ
நடையாய வுடன்முழுது நாவாய் நின்று
நவில்கின்றே னென்பாவி நாவைச் சற்று
மிடையாத கொடுந்தீயாற் சுடினுமன்றி
யென்செயினும் போதாதே யெந்தா யெந்தாய்.

வஞ்சமிலார் நெஞ்சகத்தே மருவு முக்கண்
மாமணியே யுனைநினையேன் வாளா நாளைக்
கஞ்சமலர் முகத்தியர்க்கும் வாதிற் றோன்றுங்
களிப்பினுக்குங் கழிக்கின்றேன் கடைய னேனை
நஞ்சமுணக் கொடுத்துமடித் திடினும்வாளா
னசிப்புறவே துணித்திடினு நலியத்தீயா
லெஞ்சலுறச் சுடினுமன்றி யந்தோ வின்னு
மென்செயினும் போதாதே யெந்தாயெந்தாய்

அருள்பழுக்குங் கற்பகமே யரசே முக்க
ணாரமுதே நினைப்புகழே னந்தோ வஞ்ச
மருள்பழுக்கு நெஞ்சகத்தேன் வாளா நாளை
வாதமிட்டுக் கழிக்கின்றேன் மதியிலேனை
வெருள்பழுக்குங் கடுங்காட்டில் விடினுமாற்று
வெள்ளத்தி லடித்தேக விடினும் பொல்லா
விருள்பழுக்கும் பிலஞ்சேர விடினுமன்றி
யென்செயினும் போதாதே யெந்தயெந்தாய்.

பெருங்கருணைக் கடலேயென் குருவேமுக்கட்
பெருமானே நினைப்புகழேன் பேயேனந்தோ
கருங்கன்மனக் குரங்காட்டி வாளா நாளைக்
கழிக்கின்றேன் பயனறியாக் கடையனேனை
யொருங்குருள வுடல்பதைப்ப வுறுங்குன் றேற்றி
யுருட்டுகினு முயிர்கடுங்க வுள்ள மேங்க
விருங்கழுவி லேற்றுகினு மன்றி யின்னு
மென்செயினும் போதாதே யெந்தா யெந்தாய்.

தொழுகின்றோ ருளத்தமர்ந்த சுடரே முக்கட்
சுடர்க்கொழுந்தே நின்பதத்தைத் துதியேன்
விழுகின்றே னல்லோர்கள் வெறுப்பாய்ப்பேசி[வாதில்
வெறித்துழலு நாயனையேன் விழலனேனை
யுழுகின்ற நுகப்படைகொண் டுலையத்தள்ளி
யுழக்கினுநெட் டுடனடுங்க வுறுக்கி மேன்மே
லெழுகின்ற கடலிடைவீழ்த் திடினு மன்றி
யென்செயினும் போதாதே யெந்தா யெந்தாய்.

திருச்சிற்றம்பலம்.

---

# தியாகேசர் வண்ணப் பதிகம்.

## திருவொற்றியூர்

## கலிநிலைத் துறை.

திருச்சிற்றம்பலம்.

காரார் குழலா ளுமையோ டயில்வேற்
காளை யொடுந்தா னமர்கின்ற
வேரார் கோலங் கண்டு களிப்பா
னெண்ணு மெமக்கொன் றருளானே
னீரார் சடைமேற் பிறையொன் றுடையா
னிதிக்கோன் றோழ னெனநின்றான்
போரா ரொற்றி யூரான் றியாகப்
பெருமான் பிச்சைப் பெருமானே.

பத்தர்க் கருளும் பாவை யொடும்வேற்
பால னொடுந்தா னமர்கின்ற
நித்தக் கோலங் கண்டு களிப்பா
நினைக்கு மெமக்கொன் றருளானேற்
சித்தப் பெருமான் றில்லைப் பெருமான்
றெய்வப் பெருமான் சிவபெருமான்
பித்தப் பெருமா னொற்றித் தியாகப்
பெருமான் பிச்சைப் பெருமானே.

அறங்கொள் ளுமையோ டயிலேந் தியவெம்
மைய னொடுந்தா னமர்கின்ற
திறங்கொள் கோலங் கண்டு களிப்பான்
சிறக்க வெமக்கொன் றருளானேன்
மறங்கொள் ளெயின்மூன் றெறித்தான் கனக
மலையா னடியார் மயறீர்ப்பான்
பிறங்குஞ் சடையா னொற்றித் தியாகப்
பெருமான் பிச்சைப் பெருமானே.

திருச்சிற்றம்பலம்.

## ஆடலமுதப்பத்து.

### திருவொற்றியூர்—திருத்தில்லை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சிந்தை நொந்துநொந் தயர்கின்றேன் சிவனே
 செய்வ தோர்ந்திலேன் றீக்குண முடையேன்
வந்து நின்னடிக் காட்செய வென்றால்
 வஞ்ச நெஞ்சமென் வசநின்ற திலையே
யெந்தை நின்னரு ளுண்டெனி னுய்வே
 னில்லை யென்னினு னில்லையுய்ந் திடலே
யந்தி வானிறத் தொற்றியூ ரரசே
 யம்ப லத்திநின் றாடல்செய் யமுதே.

உன்னை யுன்னிநெக் குருகிநின் றேத்த
 வுள்ள மென்வச முற்றதின் றேனு
மென்னை யாளுத லுன்கட னன்றே
 யிரக்க மென்பதுன் னிடத்திலை யன்றோ
முன்னை வல்வினை முடித்திடிற் சிவனே
 மூட னேனுக்கு முன்னிற்ப தெவனோ
வன்னை யப்பனே யொற்றியூ ரரசே
 யம்ப லத்திநின் றாடல்செய் யமுதே.

யாது நின்கருத் தறிந்திலேன் மனமோ
 வென்வ சப்படா திருத்தலை யுரைத்தேன்
தீது செய்யினும் பொறுத்தெனைச் சிவனே
 தீய வல்வினைச் சேர்ந்திடா வண்ணம்

பாது காப்பதுன் பரமின்றேற் பலவாய்
பகர்த லென்னகாண் பழிவரு முனக்கே
யாது காண்டியெம் மொற்றியூ ரரசே
யம்ப லத்தினின் றுடல்செய் யமுதே.

திருச்சிற்றம்பலம்.

## திருவடிச்சரண்புகல்.

### திருவொற்றியூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஓட வெண்கலு நமக்கென்ன குறைகா
ணுற்ற நற்றுணை யொன்றுமில் லார்போல்
வாட நெஞ்சமே வருதியென் னுடனே
மகிழ்ந்துநா மிருவருஞ் சென்று மகிழ்வாய்
கூட னேர்திரு வொற்றியூ ரகத்துக்
கோயின் மேவிநங்குடி முழுதாளத்
தாட லந்தரு நமதருட் செல்வத்
தந்தை யாரடிச் சரண்புக லாமே.

விடங்கொள் கண்ணினா ரடிவிழுந் தையோ
வெட்கி னுயிந்த விதியுனக் கேனோ
மடங்கொ ணெஞ்சமே நினக்கின்று நல்ல
வாழ்வு வந்தது வருதியென் னுடனே
யிடங்கொள் மாரிடை நமக்கினி யொப்பா
ரியார்கண் டாரயொன் றுமெண்ணலெ கமலத்
தடங்கொ ளொற்றியூ ரமர்ந்தநஞ் செல்வத்
தந்தை யாரடிச் சரண்புக லாமே.

திருச்சிற்றம்பலம்.

---

# தவத்திறம்போற்றல்

## திருவொற்றியூர்

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

வில்வத் தொடும்பொற் கொன்றையணி
வேணிப் பெருமா னொற்றிநகர்
செல்வப் பெருமான் சிவபெருமான்
றியாகப் பெருமான் றிருவழகைக்
கல்வைப் புடைய மனங்களிக்கக்
கண்கள் களிக்கக் கண்டுநின்றே
னில்வைப் புடையே னம்மாநா
னென்ன தவந்தான் செய்தேனே.

மறபபை யகனற மனததுாவோா
வாழ்த்த வவர்க்கு வான்கதியின்
சிறப்பையளிக்குஞ் சிவபெருமான்
றியாகப்பெருமான் றிருநடத்தைப்
பிறப்பை யகர்று மொற்றியிற்போய்ப்
பேரா னந்தம் பெறக்கண்டே
னிறப்பைத் தவிர்த்தே னம்மாநா
னென்னதவந்தான் செய்தேனே.

மு[illegible]க்கு
முத்துச் சிவிகை குடை யொடுபொற்
சின்ன மளித்தோன் சிவபெருமான்
றியாகப் பெருமான் றிருவடிவைக்

கன்னின் றுருகா நெஞ்சுருகக்
கண்டேன்கண்ட காட்சிதனை
யென்னென் றுரைப்பே னம்மாநா
னென்னதவந்தான் செய்தேனே.

திருச்சிற்றம்பலம்.

நெஞ்சுறுத்த திருநேரிசை.

திருவொற்றியூர்

நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

நெஞ்சே வுலக நெறிநின்று நீமயலா
லஞ்சே லென்பின்வந் தருள்கண்டா-யெஞ்சாத
தவக்கொழுந்தாஞ் சற்குணவர் தாழ்ந்தேத்துமொற்றிச்
சிவக்கொழுந்தை வாழ்த்துநாஞ் சென்று.

வருநா ளுயிர்வாழு மாண்பறியோ நெஞ்சே
யொருநாளு நீவேறென் றுன்னே-றிருநாளைப்
போவான் றொழுமன்றிற் புண்ணியனையொற்றியிற்று
யாவான் றிருவடி யல்லால்.

ஆலாலமுண்டமிடற் றாரமுதையற்புதத்தைக்
கல்லாலநீழலமர் கற்பகத்தைச்-சொல்லார்ந்த
விண்மணியையென் னுயிரை மெய்ப்பொருளை யொற்றி
கண்மணியை நெஞ்சே கருது. [யிலென்ற

என்றென் றழுதா யிலேயேயென் னெஞ்சமே
யொன்றென்று நின்றவுயர்வுடையா-னன்றென்ற
செம்மைத்தொழும்பர் தொழுஞ்சீரொற்றியூரண்ண
னம்மைத் தொழும்பு கொள்ளுநாள்.

பாங்குடையார் மெய்யிற் பலித்ததிரு நீறணியாத்
தீங்குடையார் தீமனையிற்செல்லாதே-யோங்குடையா
ளூற்றமர்ந்தபாகத்தெம்மொற்றியப்பன்பொன்னருளைப்
பெற்றமர்தி நெஞ்சே பெரிது.

வேண்டாமை வேண்டுவது மேவாத்தவமுடையோர
தீண்டாமை யாததுநீ தீண்டாதே-யீண்டாமை
யொன்றுவபோனெஞ்சேநீயொன்றியொற்றியூரன்பாற்
சென்றுதொழு கண்டாய் தினம்.

ஏலக்குழலா ரிடைக்கீழ்ப் படுங்கொடிய
ஞாலக்கிடங்கரினை நம்பாதே-நீல
மணிகண்டாவென்று வந்து வாழ்த்தி நெஞ்சேநாளும்
பணிகண்டா யன்னோன்பதம்.

பதந்தருவான்செல்வப் பயன்றருவான் மன்னுஞ்
சதந்தருவான் யாவுந்தருவா-னிதந்தருமென்
னெஞ்சமென்கொல்வாடுகின்றாய் நின்மலாநின்னடியே
தஞ்சமென்றுலொற்றியப்பன் றான்.

திருச்சிற்றம்பலம்.



# சிகாமணிமாலை.

புள்ளிருக்கும் வேளூர்.

கட்டளைக் கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

கல்லேன் மனக்கருங் கல்லேன் சிறிதுங் கருத்தறியாப் [றி
பொல்லேன் பொய்வாஞ்சித்தபுல்லேனிரக்கம் பொறுமைசி
இல்லே னெனினுநின் பாலன்றி மற்றையி டத் திற்சற்றுஞ்
செல்லேன் வயித்திய நாதா வமரர் சிகாமணியே.

நானேநினக்குப்பணிசெயல்வேண்டுநின்னுண்மலர்த்தா
டானேயெனக்குத்துணைசெயல்வேண்டுந்தயாநிதியே
கோனேகரும்பின்சுவையேசெம்பாலொடுகூட்டுநறுந்
தேனேவயித்தியநாதாவமரர்சிகாமணியே.

[ன்ற
புல்வாயின்முன்னர்ப்புலிப்போத் தெனவென்முன்போந்துநி
கல்வாய் மனத்தரைக் கண்டஞ்சி னேனைக் கடைக்கணிப்பா
யல்வாய்மணிமிடற் றுாரமு தேயரு ளான்றபெருஞ்
செல்வா வயித்திய நாதா வமரர் சிகாமணியே.

ஊண்கொண்ட தேகத்து முள்ளத்து மேவி யுறும்பிணியா
னுண்கொண்ட துன்பந்தவிர்ப்பாய் வயித்திய நாதவென்றே
வான்கொண்ட நின்னருட் சீரேத்துகின்ற வகையறியேன்
றேன்கொண்ட கொன்றைச் சடையா யமரர் சிகாமணியே.

திருச்சிற்றம்பலம்.

## கலிமுறையீடு

### கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்விடு கின்றில னென்றெம் புண்ணியா
கைவிடுகின்றியோகடையனேன்றனைப்
பைவிட முடையவெம பாய்புமேற்ற நீ
பெய்விட மனையவென் பிழைபொ றுக்கவே

இல்லையேயென்ப திங்கில்லை யென்றரு
ளல்லையேநீயரு ளயர்ந்துநல்கிறுற்
கல்லையேயனையவென் கன்ம நெஞ்சக
மொல்லையேவஞ்சம்விட் டுவக்குமுண்மையே.

திருச்சிற்றம்பலம்.

### நெஞ்சோடுநேர்தல்.

கோயில்

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இன்னு மென்மன மேகுகின் றனையோ
வேழை நெஞ்சமே யிங்குமங்குந்தான்
முன்னை நாம்பிறந் துழன்றவத் துயரை
முன்னி லென்குலை முறுக்குகின் றனகா
ணென்னை நீயெனக் குறுதுணை யந்தோ
வென்சொலேற்றிலையெழில்கொளும் பொதுவின்
மன்னு நம்முடை வள்ளலைநினைத்தான்
மற்று நாம்பிற வாவகை வருமே

பிறந்து முன்னரிவ் வுலகினும் பெண்டு
பிள்ளை யாதியபெருந்தொடக் குழந்தே
யிறந்து வீழ்கதி யிடைவிழுந் துழன்றே
யிருந்த சேடத்தி னித்தனை யெல்லா
மறந்து விட்டனை நெஞ்சமே நீதான்
மதியி லாயது மறந்தில னெளியேன்
றுறந்து நாம்பெறுஞ் சுகத்தினையடையச்
சொல்லும் வண்ணநீ தொடங்கிடினன்றே.

திருச்சிற்றம்பலம்.

நெஞ்சைத்தேற்றல்

திருவொற்றியூர்

எண்சீர் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இலவு காக்கின்ற கிள்ளைபோ லுழன்று
மென்னை நின்மதி யேழை நீ நெஞ்சே
பலவு வாழைமாக் கனிகனிந் திழியும்
பணைகொ ளொற்றியூர்க் கென்னுடன் வருதி
நிலவு வெண்மதிச் சடையுடை யழகர்
நிறைய மேனியி னிகழ்ந்தநீற் றழகர்
குலவுகின்றனர் வேண்டிய வெல்லாங்
கொடுப்பர் வாங்கிநான் கொடுப்ப னுன்றனக்கே

மன்னு ருத்திரர் வாழ்வைவேண் டினையோ
மாலவன்பெறும் வாழ்வுவேண் டினையோ
வன்ன லூர்திபோ லாகவேண் டினையோ
வமையு மிந்திர னாகவேண் டினையோ

வென்ன வேண்டினுந் தடையிலை நெஞ்சே
யின்று வாங்கிநா னீகுவ னுனக்கே
வன்னி யஞ்சடை யெம்பிரா னொற்றி
வளங்கொ ளூரிடை வருதியென் னுடனே.

மறப்பி லாச்சிவ யோகம்வேண் டுகினும்
வழுத்த ரும்பெரு வாழ்வுவேண் டுகினு
மிறப்பி லாதின்னு மிருக்கவேண் டுகினும்
யாது வேண்டினு மீகுவ னுனக்கே
பிறப்பி லானெங்கள் பரசிவ பெருமான்
பித்த னென்று நீ பெயர்ந்திட னெஞ்சே
வறப்பி லானருட் கடலவ னமர்ந்து
வாழு மொற்றியின் வருதியென் னுடனே

காலஞ் செல்கின்ற தறிந்திலை போலுங்
காலன் வந்திடிற் காரிய மிலைகா
ணீலஞ் செல்கின்ற மிடற்றினர் கரத்தி
னிமிர்ந்த வெண்மழுப் பேந்திய நிமல
ரேலஞ் செல்கின்ற குழலியோர் புடையா
ரிருக்கு மொற்றியூர்க் கென்னுடன்வருதி
ஞாலஞ் செல்கின்ற துயர்கெட வரங்க
ணல்கு வாரவை நல்குவ னுனக்கே.

திருச்சிற்றம்பலம்.

---

## நெஞ்சறிவுறூஉ.

### திருவொற்றியூர்.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆட்டு கின்றதற் காகவம் பலத்து
ளாடு கின்றசே வடிமலர் நினையாய்
வாட்டு கின்றனை வல்வினை மனனே
வாழ்ந்து நீசுக மாயிரு கண்டாய்
கூட்டு கின்றநம் பரசிவன் மகிழ்விற்
குலவு மொற்றியூர்க் கோயில்சூழ்ந் தின்ப
மீட்டு கின்றதற் கேகின்றே னுனக்கு
மியம்பி னேன்பழி யில்லையென் மீதே

யாது கண்டனை யதனிடத் தெல்லா
மணைகின் றுயவ மாகநிற் கீந்த
போது போக்கினை யேயினி மனனே
போதி போதிநீ போம்வழி யெல்லாங்
கோது நீக்கிநல் லருடரும் பெருமான்
குலவு மொற்றியூர்க் கோயிலுக்கின்றே
யேத மோடநான் செல்கின் றேற னுனக்கு
மியம்பி னேன்பழி யில்லையென் மீதே

திருச்சிற்றம்பலம்.

---

# நெடுமொழிவஞ்சி.

---

## திருவொற்றியூர்.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

### திருச்சிற்றம்பலம்.

கோவ மென்னுமோர் கொலைப்புலைத் தலைமைக்
கொடிய னேயெனைக் கூடி நீ நின்ற
பாவ வன்மையாற் பகையடுத் துயிர்மேற்
பரிவி லாமலே பயனிழந் தனன்காண்
சாவ நீயில தேலெனை விடுக
சலஞ்செய் வாயெனிற் சதுர்மறை முழக்க
மோவி லொற்றியூர்ச் சிவனருள் வாளா
லுன்னை வெட்டுவ லுண்மையென் றுணரே.

மோக மென்னுமோர் மூடரிற் சிறந்தோய்
முடிவி லாத்துயர் மூலவில் லொழுக்கிற்
போக மென்னுமோ ரளற்றிடை விழவும்
போற்று மக்கள்பெண் டன்னைதந் தையராஞ்
சோக வாரியி லழுந்தவு மியற்றிச்
சூழ்கின் றாயெனைத் தொடர்ந்திடேற் றுரடரி
லோகை யொற்றியூர்ச் சிவனருள் வாளா
லுன்னை வெட்டுவ லுண்மையென் றுணரே.

மதமெ னும்பெரு மத்தனே யெனைநீ
வருத்த லோதினல் வாயிலுக் கடங்கா
சிதமெ னும்பரன் செயலினை யறியாய்
தீங்கு செய்தனர் நன்மையாஞ் செய்தோ

மிதம திந்தன மெமக்கினி யொப்பார்
யாவ ரென்றனை யிழிச்சினை யடியார்க்
குதவு மொற்றியூர்ச் சிவனருள் வாரா
துன்னை வெட்டுவ துண்மையென் றணரே

அமைவ திந்திடா வாணவப் பயலே
யகில கோடியு மாட்டுகின் றவன்கா
ணமை நடத்துவோ னீதுண ராம
லின்று நாம்பர னிணையடி தொழுதோங்
கமைவி னேத்திநோ மடியரு மானோங்
கனிகின் றேமெனக் கருதிட மயக்கே
லுமைய னொற்றியூர்ச் சிவனருள் வாரா
துன்னை வெட்டுவ துண்மையென் றணரே

திருச்சிற்றம்பலம்.

---

## பற்றின் றிறம்பகர்தல்.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

மூவரை யளித்த முதல்வனை முக்கண்
மூர்த்தியைத் தீர்த்தனைப் பெரிய
தேவரைக்காத்த செல்வனை யொற்றித்
தியாகனை நினைந்துநின் றேத்தாப்
பாவரை வரையாப் படிற்றரை வாதப்
பதடரைச் சிதடரைப் பகைசேர்
கோவரைக் கொடிய குணத்தரைக் கண்டாற்
கூசுவ கூசுவ விழியே.

கஞ்சனைச் சிரங்கொய் கரத்தனை மூன்று
கண்ணனைக் கண்ணனைக் காத்த
தஞ்சனை யொற்றித் தலத்தனைச் சைவத்
தலைவனைத் தாழ்ந்துநின் றேத்தா
வஞ்சரைக் கடைய மடையரைக் காம
மனத்தரைச் சினத்தரை வலிய
நஞ்சரை யிழிந்த நரகரைக் கண்டா
னடுங்குவ நடுங்குவ மனமே.

ஈசனைத் தாயி லினியனை யொற்றி
யின்பனை யன்பனை யழியாத்
தேசனைத் தலைமைத் தேவனை ஞானச்
சிறப்பனைச் சேர்ந்துநின் றேத்தா
நீசரை நாணி னெட்டரை நரக
நேயரைத் தீயரைத் தரும
நாசரை யொழியா நட்டரைக் கண்டா
னடுங்குவ நடுங்குவ மனமே.

திருச்சிற்றம்பலம்.

---

அடிமைத்திறத்தலைசல்.

திருவொற்றியூர்

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்.

தேவ ரறியார் மாலறியான்
திசைமா முகத்தோன் றானறியா
யாவ ரறிவார் திருவொற்றி
யப்பா வடியேன் யாதறிவேன்

மூவர் திருப்பாட் டினுக்கிசைந்தே
முதிர்தீம் பாலு முக்கனியுங்
காவ லமுது நறுந்தேனுங்
கைப்ப வினிக்கு நின்புகழே.

விடுத்தேன் றவத்தோர் நெறிதன்னை
வியந்தே னுலக வெந்நெறியை
மடுத்தேன் றுன்ப வாரிதனை
வஞ்ச மனத்தர் மாட்டுறவை
யடுத்தே னொற்றி யப்பாவுன்
னடியை நினையே னலமந்தேன்
படுத்தே நமன்செக் கிடும்போது
படிறேன் யாது படுவேனே.

நாடி யலுத்தே னென்னளவோ
நம்பா மன்று ணின்குறட .
மாடி மகிழுந் திருவொற்றி
யப்பா வுன்ற னருட்புகழைக்
கோடி யளவி லொருகூறுங்
குணித்தா ரின்றி யாங்காங்குந்
தேடி யலைந்துந் தெளிந்திலரே
திருமான் முதலாந் தேவர்களே

திருச்சிற்றம்பலம்.

## அவத்தொழிற்கலைசல்.

திருவொற்றியூர்

எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தப்

திருச்சிற்றம்பலம்.

தேவரே யயனே திருநெடு மாலே
சித்தரே முனிவரே முதலா
யாவரே யெனினு மையநின் றன்மை
யறிந்திலர் யானுனை யறித
லாவிவான் சுடரைக் கண்ணிலி யறியுந்
தன்மையன் றோபெருந் தவத்தோ
ரோவின்மா தவஞ்செய் தோங்குசீ ரொற்றி
யூரமர்ந் தருள்செயு மொன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

## நாளவத்தலைசல்.

திருவொற்றியூர்

எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தப்

திருச்சிற்றம்பலம்.

இன்றிருந் தவரை நாளையிவ் வுலகி
லிருந்திடக் கண்டிலே மாவா
வென்றிருந் தவத்தோ ராற்றுகின் றனரா
லேழையே னுண்டுடுத் தவமே
சென்றிருந் துறங்கி விழிப்பதே யல்லாற்
செய்வன செய்கிலே னந்தோ
மன்றிருந் தோங்கு மணிச்சுட ரொளியே
வள்ளலே யொற்றியூர் வாழ்வே.

நீரின்மே லெழுது மெழுத்தினும் விரைந்து
நிலைபடா வுடம்பினை யோம்பிப்
பாரின்மே லலையும் பாவியேன் றனக்கு
பரிந்தருள் பாலியா யென்னிற்
காரின்மேல் வரல்போற் கடாமிசை வருமக்
காலன்வந் திடிலெது செய்வேன்
வாரின்மேல் வளருந் திருமுலை மலையாண்
மணாளனே யொற்றியூர் வாழ்வே.

கான்றசோ றருந்துஞ் சுணங்கனிற் பலநாள்
கண்டபுன் சுகத்தையே விரும்பு
நான்றநெஞ் சகனே னமன்றமர் வருநா
ளுறுவ தன்றியென் செய்கேன்
சான்றவர் மதிக்கு நின்றிரு வருடான்
சார்ந்திடிற் றருக்குவ னையா
மான்றனிக் கரத்தெம் வள்ளலே யென்னை
வாழ்விக்கு மொற்றியூர் வாழ்வே.

திருச்சிற்றம்பலம்.

———o———

அருட்டிறத்தலைசல்.

திருவொற்றியூர்

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

**நறைமணக்குங் கொன்றை நதிச்சடில நாயகனே**
**கறைமணக்குந் திருநீல கண்டப் பெருமானே**
**யுறைமணக்கும் பூம்பொழில்சூ ழொற்றியப்பாவுன்னுடைய**
**மறைமணக்குந் திருவடியை வாய்நிரம்ப வாழ்த்தேனே.**

அலைவளைக்கும் பாற்கடலா னம்புயத்தான் வாழ்த்திநிதந்
தலைவளைக்குஞ் செங்கமலத் தாளுடையா யாளுடையா
யுலைவளைக்கா முத்தலைவே லொற்றியப்பா வுன்னுடைய
மலைவளைக்குங் கைம்மலரின் வண்மைதனை வாழ்த்தேனே.

குற்றஞ் செயினுங் குணமாகக் கொண்டருளு
நற்றவர்த முள்ள நடுநின்ற நம்பரனே
யுற்றவர்த நற்றுணைவா வொற்றியப்பா வென்கருத்து
முற்றிடநின் சந்நிதியின் முன்னின்று வாழ்த்தேனே.

வஞ்ச மடவார் மயக்கு மயக்கொழிய
நஞ்சமணி கண்டத்து நாதனே யென்றென்று
வுஞ்சவர்கள் வாழ்த்துகின்ற வொற்றியப்பா வுன்னுடைய
கஞ்ச மலரடிக்கே காதலுற்றுப் போற்றேனே.

பெண்மணியே யென்றுலகிற் பேதையரைப் பேசாதென்
கண்மணியே கற்பகமே கண்ணுதலிற் கொள்கரும்பே
யொண்மணியே தேனேயென் றொற்றியப்பா வுன்றனைநான்
பண்மணஞ் செய்பாட்டிற் பரவித் துதியேனே.

தந்தைதாய் மக்கண்மனை தாரமெனுஞ் சங்கடத்திற்
சிந்தைதான் சென்று தியங்கி மயங்காமே
யுந்தையென்போ ரில்லாத வொற்றியப்பா வுன்னடிக்கீழ்
முந்தையோர் போன்று முயங்கி மகிழேனே.

மின்னைப்பாம் வாழ்வைவியந் திடருள விழ்ந்தலைந்தேன்
பொன்னைப்பாய் தெய்வமணப் பூவொப்பா யென்னினுமே
யுன்னைப்பா ரில்லாத வொற்றியப்பா வுன்னுடைய
தன்னைப்பாம் வேணியின்மேற் சார்பிறையைப் பாரேனே.

திருச்சிற்றம்பலம்.

## திருவிண்ணப்பம்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஈழக் கிருந்தசெதன் னிடத்திலா யினுநீர்
தந்தை யாதலிற் சார்ந்தநன் னெறியிற்
பழக்கி வைப்பது தேவரீர்க் குரிய
பண்பன் றேவெனைப் பரிந்திலீ ராஞல்
வழக் கிருப்பதிங் குமக்குமென் றனக்கும்
வகுத்துக் கூறுதன் மரபுமற் றன்றாற்
புழைக்கை மாவுரி யீரோற்றி யுடையீர்
பொய்ய னென்னில்யான் போம்வழி யெதுவோ.

வன்மை பேசிய வன்றொண்டர் பொருட்டாய்
வழக்குப் பேசிய வள்ளல்நீ ரன்றோ
வின்மை யாளர்போல் வலியவந் திடினு
மேழை யாமிவ னென்றொழித் திட்டாற்
றன்மை யன்றது தருமமு மன்றாற்
றமியனே னின்னுஞ் சாற்றுவ தென்னே
பொன்மை யஞ்சடை யீரொற்றி யுடையீர்
பொய்ய னென்னில்யான் போம்வழி யெதுவோ

விருப்பு நின்றதும் பதமலர் மிசையவ்
விருப்பை மாற்றுதல் விரகுமற் றன்றாற்
கருப்பு நேரினும் வள்ளியோர் கொடுக்குங்
கடமை நீங்குறா ருடைமை யின்றேனு
நெருப்பு நம்முரு வாயினு மருகி
னிற்க வஞ்சுறே னீலனு மன்றாற்
பொருப்பு வில்லுடை யீரொற்றி யுடையீர்
பொய்ய னென்னில்யான் போம்வழி யெதுவோ

## பிரசாத விண்ணப்பம்.

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்.

குழிக்குமண் ணடைக்குங் கொள்கைபோற் பாழுங்
 கும்பியை யோம்பின னல்லாற்
செழிக்குமுன் றிருமுன் னீலகண் டந்தான்
 செப்புதன் மறந்தன னதனால்
விழிக்குணின் றிலங்கும் விளங்கொளி மணியே
 மென்கரும் பீன்றவெண் முத்தந்
தழிக்கொளும் வயல்சூ ழொற்றியி லுன்னாற்
 றண்டிக்கப் பட்டன னன்றே.

அருமருந் தனையாய் நின்றிரு முன்போ
 யாகரா வெனத் தொழன் மறந்தே
யிருளுறு மனத்தேன் மலத்தினு மிழிந்த
 வியல்புற வுண்டன னதனாற்
கருமருந் தனைய வஞ்செழுத் தோதுங்
 கருத்தர்போற் றிருத்தம தாகத்
தரும நின்றோங்கு மொற்றியி லுன்னாற்
 றண்டிக்கப் பட்டன னன்றே.

திருச்சிற்றம்பலம்.



## வழிமொழிவிண்ணப்பம்.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆட்டு கின்றநீ யறிந்திலை போலு
மைவர் பக்கநா னாடுகின் றதனைக்
காட்டு கின்றவான் கடலிடை யெழுந்த
காள முண்டவக் கருணையை யுலகி
னாட்டு கின்றனை யாயிலிக் கொடிய
நாய்க்கு முன்னருள் நல்கிட வேண்டுந்
தீட்டு கின்றநற் புகழொற்றி யரசே
திருச்சிற் றம்பலந் திகழொளி விளக்கே.

உய்ய வொன்றிலேன் பொய்யனென் பதனை
யொளித்தி லேனிந்த வொதிய னுக் கருணீ
செய்ய வேண்டுவ தின்றெனிற் சிவனே
செய்வ தென்னைநான் றிகைப்பதை யன்றி
மைய னெஞ்சினே னாகினு முன்னை
மறந்தி லேனிது வஞ்சமு மன்றே
செய்ய மேனியெம் மொற்றியூர் வாழ்வே
திருச்சிற் றம்பலந் திகழொளி விளக்கே.

திருச்சிற்றம்பலம்.



## சிறுமை விண்ணப்பம்.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வெல்லு கின்றனர் வினைப்புல வேடர்
மெலிகின் றேனிங்கு வீணினிற் காலஞ்
செல்லு கின்றன வையவோ சிவனே
செய்வ தென்னைநான் சிறியருட் சிறியேன்
சொல்லு கின்றனன் கேட்கின்றாய் கேட்டுந்
தூரநின்றனை ஈரமில் லார்போற்
புல்லு கின்றசீ ரொற்றியம் பரனே
போற்றும் யாவர்க்கும் பொதுவினின் றவனே.

சுத்த நெஞ்சருட் சேர்க்கினு மலது
சோம்ப னெஞ்சருட் சேர்க்கினு நினது
சித்தமென்னள வன்றது சிவனே
செய்வ தென்னைநான் சிறியருட் சிறியே
னித்தநின்னடி யன்றியொன் றேத்தே
னித்த னேயது நீயறி யாயோ
புத்த ருந்தமி ழொற்றியூ ரரசே
போற்றும் யாவர்க்கும் பொதுவினின் றவனே.

தத்து மத்திடைத் தயிரென வினையாற்
றளர்ந்து மூப்பினிற் றண்டுகொண் டுழன்றே
செத்துமீளவும் பிறப்பெனிற் சிவனே
செய்வ தென்னைநான் சிறியருட் சிறியேன்
றொத்து வேண்டுநின் றிருவடிக் கெனையே
துட்ட னென்றியேற் றனைபிறி தறியேன்
புத்தை நீக்கிய வொற்றியம் பரனே
போற்றும் யாவர்க்கும் பொதுவினின் றவனே

# ஆற்றாவிண்ணப்பம்.

---

## திருவொற்றியூர்.

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சரணவா ரிசமென் றலைமிசை யின்னுந்
    தரித்திலை தாழ்த்தனை யடியேன்
கரணவா தனையுங் கந்தவா தனையுங்
    கலங்கிடக் கபமிழுத் துந்து
மரணவா தனைக்கென் செய்குவமென்றே
    வருந்துகின் றனன்மன மாழாந்
தரணமூன் றெரிய நகைத்தவெம் மிறையே
    யடியனை யாள்வதுன் கடனே.

கடம்பொழி யோங்க லுரியுடை யுடுக்குங்
    கடவுளே கடவுளர் கோவே
மடம்பொழி மனத்தேன் மலஞ்செறிந் தூறும்
    வாயிலோ ரொன்பதில் வருமிவ்
வுடம்பொழிந் திடுமேன் மீண்டுமீண் டெந்த
    வுடம்புகொண் டுழல்வனோ வென்று
நடம்பொழி பதத்தாய் நடுங்குகின் றனன்கா
    ணான்செயும் வகையெது நவிலே.

திருச்சிற்றம்பலம்.

---

# இரங்கல் விண்ணப்பம்.

## திருவொற்றியூர்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கொடிய நெஞ்சினேன் கோபமே யடைந்தேன்
கோடிகோடியாங் குணப்பழு துடையேன்
கடிய வஞ்சகக் கள்வனேன் றனக்குன்
கருணை யீந்திடா திருந்திடிற் கடையே
னடிய னுருவ னெவ்வண மென்றே
யைய வையநா னலறிடு கின்றே
னெடிய மும்மல மொருங்கறுத் தவர்சே
ரொற்றி மேவிய வுலகுடை யோனே.

பந்த மட்டினும் பாவிநெஞ் சகத்தாற்
பவப்பெ ருங்கடற் படிந்துழன் றயர்ந்தே
னிந்த மட்டினு முழன்றதே யமையு
மேற வேண்டுமுன் னெண்ணமே தறியே
னந்த மட்டினி யிருத்தியோ வன்றி
யடிமை வேண்டிநின் னருட்பெரும் புணையை
யுந்த மட்டினுற் றருதியோ வுரையா
யொற்றி மேவிய வுலகுடை யோனே.

திருச்சிற்றம்பலம்.

---

## காதல் விண்ணப்பம்.

——(௦)——

திருவொற்றியூர்

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

வஞ்சக வினைக்கோர் கொள்கல மனைய
　　மனத்தினே னனைத்தினுங் கொடியேன்
றஞ்சமென் றடைந்தே னின்றிருக் கோயிற்
　　சந்நிதி முன்னர்நிற் கின்றே
னெஞ்சலி லடங்காப் பாவியென் றெனைநீ
　　யிகழ்ந்திடி லென்செய்வேன் சிவனே
கஞ்சன்மால் புகழு மொற்றியங் கரும்பே
　　கதிதருங் கருணையங் கடலே.

அளவிலா வுலகத் தனந்தகோ டிகளா
　　மாருயிர்த் தொகைக்குளு மெனைப்போ
லிளகிலா வஞ்ச நெஞ்சகப் பாவி
　　யேழைக ளுண்டுகொ லிலைகாண்
டளர்விலா துனது திருவடி யெனும்பொற்
　　றாமரைக் கணியனு குவனோ
களவிலார்க் கினிய வொற்றியம் மருந்தே
　　கனந்தருங் கருணையங் கடலே.

சற்றுநற் குணந்தான் சார்ந்திடாக் கொடியார்
　　தந்தலை வாயிலுட் குரைக்கும்
வெற்றுநாய் தனக்கும் வேறுநாயாக
　　மெலிகின்றே னைம்புலச் சேட்டை

யற்றுநின் றவர்க்கு மரியநின் றிருத்தாட்
கடிமைசெய் தொழுகுவ னேயோ
கற்றமுற் றுணர்ந்தோர்க் கருட்டரு மொற்றிக்
கடவுளே கருணையங் கடலே.

திருச்சிற்றம்பலம்.

---

பொருள் விண்ணப்பம்.

திருவொற்றியூர்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

எண்ணி லாநினைப் புற்றதின் வழியே
யின்ப துன்பங்க ளெய்தியென் னெஞ்சம்
கண்ணி லாக்குரங் கெனவுழன் றதுகாண்
கடைய னேன்செயக் கடவதொன் றறியேன்
பெண்ணி லாவிய பாகத்தெம் மழுதே
பிரம ஞதியர் பேசருந் திறனே
தெண்ணி லாமுடி யொற்றியங் கனியே
செல்வ மேபர சிவபரம் பொருளே.

யாது சொல்லினுங் கேட்பதின் றந்தோ
யான்செய் தேனென தென்னுமிவ் விருளிற்
காது கின்றதென் வஞ்சக நெஞ்சங்
கடைய னேன்செயக் கடவதொன் றறியே
ஞேது மாமறை யுபநிட தத்தி
னுச்சி மேவிய வச்சிர மணியே
தீது நீக்கிய வொற்றியந் தேனே
செல்வ மேபர சிவபரம் பொருளே.

திருச்சிற்றம்பலம்.

---

## கோடி விண்ணப்பம்.

### திருவொற்றியூர்.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

### திருச்சிற்றம்பலம்.

மாலை யொன்றுதோட் சுந்தரப் பெருமான்
மணத்திற் சென்றவண் வழக்கிட்ட தெனவே
யோலை யொன்றுநீர் காட்டுதல் வேண்டா
முவந்து தொண்டனென் றுரைப் பிரேலென்னை
வேலை யொன்றல மிகப்பல வெனினும்
வெறுப்பி லாதுளம் வியந்துசெய் குவன்காண்
சோலை யொன்றுசீ ரொற்றியூ ருடையீர்
தூய மால்விடைத் துவசத்தி னீரே.

புதிய னென்றெனைப் போக்குதி ரோநீர்
பூரு வத்தினும் பொன்னடிக் கடிமை
பதிய வைத்தன னியினு மந்தப்
பழங்க ணக்கினைப் பார்ப்பதி லென்னே
முதிய னல்லன்யா னெப்பணி விடையு
முயன்று செய்குவேன் மூர்க்கனு மல்லேன்
றுதிய தோங்கிய வொற்றியூ ருடையீர்
தூய மால்விடைத் துவசத்தி னீரே.

முத்தி நேர்கிலாத் தேவர்க டமைநான்
முந்து றேனவர் முற்பட வரினுஞ்
சுத்தி யாகிய சொல்லுடை யணுக்கத்
தொண்டர் தம்முடன் சூழ்த்திட ரெனினும்
புத்தி சேர்புறத் தொண்டர்தம் முடனே
பொருந்த வைக்கினும் போதுமற் றதுவே
துத்தி யார்பணி யீரொற்றி யுடையீர்
தூய மால்விடை துவசத்தி னீரே.

### திருச்சிற்றம்பலம்.

---

# நாடக விண்ணப்பம்.

## திருவொற்றியூர்

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பிறவிக் கண்ணிலான் கைக்கொளுங் கோலைப்
பிடுங்கி வீசுதல் பெரியவர்க் கறமோ
மறவிக் கையறை மனத்தினே னும்மேல்
வைக்கு மன்பைநீர் மாற்றுத லழகோ
வுறவிக் கொள்கையை யுள்ளிரே லிதனை
யோதிக் கொள்ளிட மொன்றிலை கண்டீர்
நறவிக் கோங்கிய வொற்றியம் பதியீர்
ஞான நாடக நவிற்றுகின் றீரே.

தந்தை யானவர் தனையரைக் கெடுக்கச்
சமைவ ரென்பது சற்றுமின் றுலகி
லெந்தை நீரெனை வஞ்சக வாழ்வி
லிருத்து வீரெனில் யார்க்கிது புகல்வேன்
பந்தமேலிட வென்பரி தாபம்
பார்ப்பீ ரோவிருட் பங்கய விழியீர்
நந்த வொண்பனை யொற்றியூ ருடையீர்
ஞான நாடக நவிற்றுகின் றீரே.

கல்வி வேண்டிய மகன்றனைப் பெற்றோர்
கடுத்த லோர்சிறு கதையிலு மிலைகாண்
செல்வம் வேண்டிலேன் றிருவருள் விழைந்தேன்
சிறிய னேனைநீர் தியக்குத லழகோ
பல்வி தங்களாற் பணிசெயு முரிமைப்
பாங்கு நல்குமப் பாமுமக் கன்றே
நல்வி தத்தினர் புகழொற்றி யுடையீர்
ஞான நாடக நவிற்றுகின் றீரே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவண்ண விண்ணப்பம்.

### திருவொற்றியூர்

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

கண்ணப்பா வென்றருளுங் காளத்தியப்பாமுன்
வண்ணப்பால் வேண்டு மதலையைப்பால் வாரிதியை
யுண்ணப்பா வென்றுரைத்த வொற்றியப்பா வந்தருள
வெண்ணப்பா வென்றழுமிவ் வேழைமுகம் பாராயோ.

---

## மருட்கை விண்ணப்பம்.

### திருவொற்றியூர்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

யாது செய்குவன் போது போகின்ற
தண்ண லேயுமை தன்பருக் கடியேன்
கோது செய்யினும் பொறுத்தருள் புரியுங்
கொள்கை யீரெனைக் குறுகிய குறும்பர்
வாது செய்கின்றார் மனந்தளர் கின்றேன்
வலியி லேன்செயும் வகையொன்று மறியேன்
மாதர் செய்பொழி லொற்றியூ ருடையீர்
வண்கை யீரென்கண் மணியனை யீரே.

என்பி றப்பினை யார்க்கெடுத் துரைப்பே
னென்செய் வேனெனை யென்செய நினைக்கேன்
முன்பி றப்பிடை யிருந்தசே டத்தான்
மூட வாழ்க்கையா மகாடகத் தடைந்தே
யன்பி றந்தவெங் காமவேட் டுவனா
லலைப்புண் டேனுமை தருள்பெற விழைந்தேன்
வன்பி றந்தவர் புகழொற்றி யுடையீர்
வண்கை யீரென்கண் மணியனை யீரே.

திருச்சிற்றம்பலம்.

---

## கோடைமட விண்ணப்பம்.

### திருவொற்றியூர்.

கட்டளைக் கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

நின்போன்ற தெய்வமொன் றின்றென வேத நிகழ்த்தவுநின்
பொன்போன்ற ஞானப் புதுமலர்த் தாட்டுணைப் போற்றுகிலே
னென்போன்ற வேழையர் யாண்டுளா ரம்பலத் தோடஞ்செய்
மின்போன்ற வேதிய னேயொற்றி மேவிய வேதியனே.

காவல னேயன்று மாணிக்குப் பொற்கிழிக் கட்டவிழ்த்த
பாவல னேதொழும் பாணன் பரிசுரப் பாட்டளித்த
நாவல னேதில்லை நாயக னேகட னஞ்சையுண்ட
மாவல னேமுக்கண் வானவ னேயொற்றி மன்னவனே.

திருச்சிற்றம்பலம்.

---

## சிறு விண்ணப்பம்.

### பொது.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பண்ணுலுன் னருட்புகழைப் பாடு கின்றார்
பணிகின்றார் நின்னழகைப் பார்த்துப் பார்த்துக்
கண்ணார வுளங்குளிரக் களித்தா னந்தக்
கண்ணீர்கொண் டாடுகிறார் கருணை வாழ்வை
யெண்ணுநின் றனையெந்தா யெந்தா யெந்தா
யென்கின்றார் நின்னன்ப ரெல்லாமென்ற
னண்ணுநா னொருபாவி வஞ்ச நெஞ்சா
லலைகின்றே னென்செய்கே னந்தோ வந்தோ.

கொலையறியாக் குணத்தோர்நின்னன்பரெல்லாங்
குணமேசெய் துன்னருடான் கூடுகின்றார்
புலையறிவே னொருவன் பிழையே செய்து
புலங்கெட்ட விலங்கேபோற் கலங்குகின்றே
னிலையறியே னெறியொன்று மறியேனெங்கு
நினையன்றித் துணையொன்று மறியேன்சற்று
மலையறியா வருட்கடலே யாள்க வின்றே
லலைகின்றே னென்செய்கே னந்தோ வந்தோ

திருச்சிற்றம்பலம்.

---

## பெரு விண்ணப்பம்.

## பொது.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உண்மை யறியே னெனினுமெனை
யுடையா யுனையே யொவ்வொருகா
லெண்மை யுடையே னினைக்கின்றே
னென்னே யுன்னை யேத்தாத
வெண்மை யுடையார் சார்பாக
விட்டா யந்தோ வினையேனை
வண்மை யுடையா யென்செய்கேன்
மற்றோர் துணையிங் கறியேனே.

பாலே யமுதே பழமேசெம்
பாகே யெனுநின் பதப்புகழை
மாலே யயனே யிந்திரனே
மற்றைத் தேவ ரேமறைக

ஞாலே யறியா தெளிற்சிறியே
ஞானே வறிவே ஞாயகவென்
மேலே யருள்கூர்ந் தெனைநின்றன்
மேவுவோர்பாற் சேர்த்தருளே.

கண்ணார் நுதலோய் பெருங்கருணைக்
கடலோய் கங்கை மதிச்சடையோய்
பெண்ணா ரிடத்தோ யாவர்கட்கும்
பெரியோய் கரியோன் பிரமனொடு
மண்ணா வெனநின் றேத்தெடுப்ப
வார்ந்தோய் நின்ற னடிமலரை
பெண்ணா துழல்வோர் சார்பாக
விருக்கத் தரியே னெனையேனே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்காட்சிக் கிரங்கல்.

### திருவொற்றியூர்.

### தரவு கொச்சகக் கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

மண்ணையும் வாழ்க்கையிடை மாழாந்து வன்பிணிபாற்
புண்ணையுஞ் நெஞ்சம புழுங்குகின்ற பொய்யவனேன்
பண்ணையு மின்பப் பரஞ்சுடரே வென்னிரண்டு
கண்ணையுன் பொன்முகத்தைக் காணக் கிடைத்திலனே.

அல்லவைத்த நெஞ்சா லழுங்குகின்ற நாயடியேன்
சொல்வைத்த வுண்மைத் துணையே யிணைந்தோண்மேல்
வில்வத் தொடை பணிந்த வித்தகனே நின்னுடைய
செல்வத் திருவடியின் சீர்காணப் பெற்றிலனே.

திருச்சிற்றம்பலம்.

## திருவருட்கிரங்கல்

### திருவொற்றியூர்.

### கொச்சகக் கலிப்பா.

### திருச்சிற்றம்பலம்.

எஞ்சா விடரா லிரும்பிணியா லேங்கிமனம்
பஞ்சாக நொந்து பரதவிக்கு நாயேனைச்
செஞ்சாலி யோங்குந் திருவொற்றி யப்பாநீ
யஞ்சாதே யென்றுன் னருள்கொடுத்தா லாகாதோ.

செய்பிழையைத் தானறிந்துஞ் சீருள் பொறுப்பாளிந்
நாய்பிழையை நீபொறுக்க ஞாயமுமுண் டையாவே
தேய்மதிபோ னெஞ்சந் தியக்கமுறச் சஞ்சலத்தால்
வாயலறி வாடுமெனை வாவென்று லாகாதோ.

கண்ணுண் மணியேபோற் கருதுகின்ற நல்லோரை
யெண்ணுங் கணமும்விடுத் தேகாத வின்னமுதே
யுண்ணு முணவுக்கு முடைக்குமுயன் றோடுகின்ற
மண்ணுலகத் தென்றன் மயக்கறுத்தா லாகாதோ.

திருச்சிற்றம்பலம்.

---

## எண்ணத்திரங்கல்.

### திருவொற்றியூர்.

### கொச்சகக் கலிப்பா.

முன்னைசெய் வெவ்வினைதான் மூண்டதுவோ வல்லதுநா
னின்னை பிழைதா னியற்றியதுண் டோவறியேன்
பொன்னேர் புரிசடையெம் புண்ணியனே யென்னுனையை
யன்னேநீ நீக்காயே லார்நீக்க வல்லாரே.

திருச்சிற்றம்பலம்.

## நெஞ்சுநிலைக் கிரங்கல்.

திருவொற்றியூர்.

கட்டளைக் கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

ஒளியா யொளிக்கு ளொளியொளி யேயொற்றி யுத்தமநீ
யளியா விடிலிதற் கென்னைசெய் கேனணங் கன்னவர்தங்
களியாற் களித்துத் தலைதெரி யாது *கயன்றுலவா
வளியாச் சுழன்றிவண் மாயா மனமெனை வாதிப்பதே.

திருச்சிற்றம்பலம்.

---

## தனிமைக் கிரங்கல்.

திருவொற்றியூர்

எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆக்க லாதிய வைந்தொழி னடத்த
　　னயன்மு னாகிய வைவரை யளித்து
நீக்க மின்றியெவ் விடத்தினு நிறைந்த
　　நித்த நீயெனு நிச்சய மதனைத்
தாக்க வெண்ணியே தாமதப் பாவி
　　தலைப்பட் டானவன் றனையகற் றுதற்கே
யூக்க முற்றநின் றிருவருள் வேண்டு
　　மொற்றி யோங்கிய வுத்தமப் பொருளே.

இமைக்கு மவ்வள வேனுநெஞ் சொடுங்கி
　　யிருக்கக் கண்டிலே னிழிவுகொண் மலத்தின்
சுமைக்கு நொந்துநொந் தையவோ நாளுந்
　　துயரி னேனயர் கின்றவென் றுயரைக்

*கயன்று என்பது மெலிந்து என்னும் பொருள் தரும்

குமைக்கும் வண்ணநின் றிருவரு ளின்னும்
கூடப் பெற்றிலேன் கூறுவ தென்னே
யுமைக்கு நல்வர முதவிய தேவே
யொற்றி யோங்கிய வுத்தமப் பொருளே.

சென்ற நாளிலோ ரிறைப்பொழு தேனும்
சிந்தை யோர்வகை தெளிந்ததன் றதுபோய்
நின்ற நாளினு நிற்கின்ற திலைகா
ணெடிய பாவியே னிகழ்த்துவ தென்னே
யென்ற னாருயிர்க் கொருபெருந் துணையா
மெந்தை யேயெனை யெழுமையுங் காத்த
வுன்றனை யின்னு முவகைகொள் கின்றே
னொற்றி யோங்கிய வுத்தமப் பொருளே.

திருச்சிற்றம்பலம்.

---

## கழிபகற்கிரங்கல்.

### பொது

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஊழை யேமிக நொந்திடு வேனோ
வுளத்தை நோவனோ வுலகிடை மயக்கும்
பாழை யேபலன் தருவ தெண்ணிப்
பாவி யேன்பெரும் படருழக் கின்றேன்
மாழை யேர்திரு மேனியெம் பெருமான்
மனமி ரங்கியென் வல்வினை கெடவந்
தேழை யேற்கரு ளாயெனி லந்தோ
யென்செய் கேனர கிடை யிடும்போதே.

அம்மை யப்பனென் னுருயிர்த் துணைவ
னரசன் தேசிக னன்புடைத் தேவ
னிம்மை யிற்பய னம்மையிற் பயன்மற்
றியாவு நீயென வெண்ணிநிற் கின்றேன்
செம்மை யிற்பெறு மன்பருள் ளகஞ்சேர்
செல்வ மேயெனைச் சேர்த்தரு ளாயே
லெம்மை யிற்பெறு வேன்சிறு நாயே
னென்செய் கேனர கிடையிடும் போதே.

தாய ராதியர் சலிப்புறு கிற்பார்
தமரு மென்றனைத் தழுவுத லொழிவார்
நேய ராதியர் நேயம்விட் டகல்வார்
நின்னை நம்பியென் னெஞ்சுவக் கின்றேன்
றீய ராதியிற் றீயனென் றெனைநின்
றிருவு ளத்திடைச் சேர்த்திடா தொழித்தா
லேயர் கோனுக்கன் றருளுமெம் பெருமா
னென்செய் கேனர கிடையிடும் போதே.

உண்ணு கின்றது முறங்குகின் றதுமே
லுடுத்து கின்றது முலவுகின் றதுமா
னண்ணு கின்றது நங்கையர் வாழ்க்கை
நாடு கின்றது நவையுடைத் தொழில்கள்
பண்ணு கின்றது மானபின் னுடலைப்
பாடை மேலுறப் படுத்துகின் றதுமென்
றெண்ணு கின்றதோ றுளம்பதைக் கின்றே
னென்செய் கேனர கிடையிடும் போதே.

திருச்சிற்றம்பலம்.

---

## அர்ப்பித்திரங்கல்.

பொது

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஊட்டு கின்றனை யுண்ணுகின் றனன்பின்
உறக்கு கின்றனை யுறங்குகின் றனன்பின்
காட்டு கின்றனை காணுகின் றனனீ
களிப்பிக் கின்றனை களிப்புறு கின்றேன்
ஆட்டு கின்றனை யாடுகின் றனனிவ்
வகில கோடியு மவ்வகை யானூற்
றீட்டு மன்பருக் கன்பநின் றனது
சித்த மன்றியான் செய்வதொன் றிலையே.

திருச்சிற்றம்பலம்.

---

## அச்சத்திரங்கல்.

கோயில்

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொருளெலாம் புணர்க்கும் புண்ணியப் பொருளே
புத்தமு தேகுணப் பொருப்பே
யிருளெலா மறுக்கும் பேரொளிப் பிழம்பே
யின்பமே யென்பெருந் துணையே
யருளெலாந் திரண்ட வொருசிவ மூர்த்தி
யண்ணலே நின்னடிக் கபய
மருளெலாங் கொண்ட மனத்தினேன் றன்பா
மயக்கெலாம் மாற்றியாண் டருளே.

அருள்பவ னின்னை யல்லதை யிங்கு
மங்குமற் றெங்குமின் றதுபோன்
மருள்பவ னென்னை யல்லதை மண்ணும்
வானமுந் தேடினு மின்றே
யிருள்பவ முடையே னென்செய்கே னின்று
ளிணைதுணை யெனநினைந் துற்றேன்
மருள்பவத் தொடுமென் றுயரறத் தாள்வாய்
வாழிய வருட்பெருந் துறையே.

திருச்சிற்றம்பலம்.

---

## புறமொழிக்கிரங்கல்.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

ஐதட் டிடுநெஞ் சகத்தேன் பிழைகளை யாய்ந்துவெறும்
பொய்தட் டிகலுடை யேற்குன் கருணை புரிந்திலையேல்
வெய்தட்டி யுண்ட விரதாநின் னன்பு விருத்தமென்றே
கைதட்டி வெண்ணகை செய்வர்கண் டாயருட் கற்பகமே.

திருச்சிற்றம்பலம்.

---

## கருணைபெறுதிரங்கல்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அன்னை யப்பனு நீயென மகிழ்ந்தே
யகங்கு ளிர்ந்துநா னுதரித் திருந்தே
னென்னை யிப்படி யிடர்கொள விடுத்தா
லென்செய் கேனிதை யாரொடு புகல்வேன்

பொன்னை யொத்தநின் னடித்துணை மலரைப்
போற்று வார்க்குநீ புரிகுவ திதுவோ
வுன்னை யெப்படி யாயினு மறவே
னுனைய லாலெனை யுடையவ ரெவரே.

கொடிய பாவியேன் படும்பரி தாபங்
குறித்துக் கண்டுமென் குறையகற் றாது
நெடிய காலமுந் தாழ்த்தனை நினது
நெஞ்சும் வஞ்சக நேர்ந்ததுண் டேயோ
வடியர் தந்துயர் கண்டிடிற் றரியா
ரைய ரென்பரென் னளவஃ திலேயோ
வொடிய மாதுயர் நீக்கிடா யென்னி
லுனைய லாலெனை யுடையவ ரெவரே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவருட்பதிகம்.

### திருவண்ணமலை

### எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருங் கடலே யானந்த நறவே
யடிநடு வந்தமுங் கடந்த
தெருட்பெரு மலையே திருவணா மலையிற்
றிகழ்சுயஞ் சோதியே சிவனே
மருட்பெருங் கடலின் மயங்குகின் றேனென்
மயக்கெலா மொழித்துவன் பிறவி
யிருட்பெருங் கடல்விட் டேறநின் கோயிற்
கெளியனேன் வரவர மருளே.

திருச்சிற்றம்பலம்.

## பிரசாதப்பதிகம்.

புள்ளிருக்கும் வேளூர்

கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

கல்லை வில்லிற் கணித்தருள் செய்ததோ
ரெல்லை யின்றி யெழுமின்ப வெள்ளமே
யில்லை யில்லை நின்னரு ளில்லையேற்
றொல்லை நோயின் றொடக்கது நீங்கலே.

திருச்சிற்றம்பலம்.

---

## பிரார்த்தனைப் பதிகம்.

திருவொற்றியூரும் - திருத்தில்லையும்

கட்டளைக் கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

நிலத்தே சிறுவர்செய் குற்றங்கள் யாவு நினைத்தறவோர்
சலத்தே யுளத்தை விடாரென்ப ராதலிற் றந்தையென்றே
குலத்தேவர்போற்றுங் குணக்குன்ற மேயெங் குலதெய்வமே
புலத்தே யிழிதகை யேன்பிழை யாவும் பொறுத்தருளே.

திருச்சிற்றம்பலம்.

---

## சிந்தைத் திருப்பதிகம்.

கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்.

விடையார்க்குங் கொடியுடைய வித்தகவென் றுன்னடியி
னிடையார்த்து நின்றழுமிவ் வேழைமுகம் பாராமே
கடையார்க்கும் வாழ்க்கையிலே நல்குரவோர்க் கீயாத
வுடையார்க் கோவென்னை யுடையா யுதவுவதே.

என்னுரிமைத் தாய்க்கு மினியாய்நின் னோங்கெழுத்தை
யுன்னு நிலைக்கென்னை யுரித்தாக்க வேண்டுதியேல்
மன்னுலகிற் பொன்னுடையார் வாயிறனைக் காத்தயர்ந்தேன்
தன்னுடைய வெண்ணந் தனைமுடிக்க வேண்டுவதே.

திருச்சிற்றம்பலம்.

---

## உய்கைத் திருப்பதிகம்

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருவுஞ் சீரும் சிறப்புந் திறலுஞ்சற்
குருவுங் கல்வியும் குற்றமில் கேள்வியும்
பொருவி லன்னையும் போக்கறு தந்தையும்
தரும வெள்விடைச் சாமிநின் னமமே.

திருச்சிற்றம்பலம்.

---

## ஆனந்தப்பதிகம்.

திருவொற்றியூர்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

குருதி நிறைந்த குறுங்குடத்தைக்
கொண்டோன் வழியிற் சென்றிடவா
யெருதின் மனத்தேன் சுமந்துநல
மிழந்து திரியு மெய்ப்பொழிய
வருதி யெனவே வழியருளி
யொற்றி யூர்க்கு வந்துன்னைக்
கருதி வணங்கச் செய்ததற்கோர்
கைம்மா றறியேன் கடையேனே.

பாவ மெனுமோர் பெருஞ் சரக்குப்
பையை யெடுத்துப் பண்பரியாக்
கோவ மெனுமோர் குரங்காட்டுங்
கொடியேன் றன்னைப் பொருட்படுத்தி
தேவ ரமுதே சிவனேநின்
றிருத்தா ளேத்த வொற்றியெனுங்
காவ னகரம் வரச்செய்தாய்
கைம்மா றறியேன் கடையேனே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவண்ணப்பதிகம்.

இரட்டைக்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

எண்ணுறு விருப்பாதி வல்விலங் கினமெலா
மிடைவிடா துழல வொளியோ
ரெள்ளளவு மின்றியஞ் ஞானவிருண் மூடிட
விருண்டுயிர் மருண்டு மாழ்க
நண்ணுமன மாயையாங் காட்டைக் கடந்துநின்
ஞானவரு ளூட்டை யடையு
நாளெந்த நாளந்த நாளிந்த நாளென்று
நாயினேற் கருள்செய் கண்டாய்
விண்ணுறு சுடர்க்கெலாஞ் சுடரளித் தொருபெரு
வெளிக்குள்வளர் கின்ற சுடரே
வித்தொன்று மின்றியே விளைவெலாந் தருகின்ற
விஞ்ஞான மழைசெய் முகிலே

கண்ணுறு நுதற்பெருங் கடவுளே மன்றினிற்
கருணைநட மிடுதெய்வமே
கனகவம் பலநாத கருணையாங் கணபோத
கமலகுஞ் சிதபாதனே.

திருச்சிற்றம்பலம்.

---

## போற்றித்திருப்பதிகம்.

எழுசீர்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

நிதிதரு நிறைவே போற்றியென் னுயிர்க்கோர்
நெறிதரு நிமலமே போற்றி
மதிமுடிக் கனியே போற்றியென் றன்னை
வாழ்வித்த வள்ளலே போற்றி
விதிமுதற் கிறையே போற்றி மெய்ஞ்ஞான
வியனெறி விளக்கமே போற்றி
பதிபசு பதியே போற்றிநின் பாதம்
பாடவெற் கருளுக போற்றி.

திருச்சிற்றம்பலம்.

---

## விண்ணப்பம்.

திருவாரூர்.

அறுசீர்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தெரியத் தெரியுந் தெரிவுடையார்
சிவானு பவத்திற் சிறக்கின்றார்
பிரியப் பிரியும் பெரும்பாவி
யடியேன்பிழையிற் பிழைக்கின்றேன்

றரியப் பொருளே யணியாரூர்ச்
சோதி மணிநீ தூயவருள்
புரியப் பெறுவே னெனிலவர்போல்
யானுஞ் சுகத்திற் பொலிவேனே

பொலிவேன் கருணை புரிந்தாயேற்
போதா னந்தக் கடலாடி
மலிவே னின்ப மயமாவே
னாரூர் மணிநீ வழங்காயேன்
மெலிவேன் றுன்பக் கடல்மூழ்கி
மேவி யெடுப்பா ரில்லாம
னலிவே னந்தோ வந்தோநின்
னல்ல கருணைக் கழகன்றே.

இருப்பு மனத்துக் கடைநாயே
னென்செய் வேனின் றிருவருளாம்
பொருப்பி லமர்ந்தா ரடியரெலா
மந்தோவுலகப் புலையொழுக்காந்
திருப்பிற் சுழன்று நானொருவன்
றிகைக்கின் றேனோர் துணைகாணேன்
விருப்பிற் கருணை புரிவாயோ
வாரூர் தண்ணார் வியனமுதே.

திருச்சிற்றம்பலம்.



## அபராத விண்ணப்பம்.

### கோயில்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உலகம் பரவும் பொருளேயென்
றுறவே யென்ற னுயிர்க்குயிரே
யிலகம் பரத்தே பரம்பரமா
யின்ப நடஞ்செ யெம்மிறையே
கலகம் பரவு மனத்தேனைக்
கைவிட் டிடநீ கருதுதியோ
திலகம் பரவு நுதற்பாக
னென்ப தருணின் றிறத்தன்றே.

உரைத்தார் சிலர்சின் றாட்கழிய
வுறவே மென்ன வுரைத்தவரே
நரைத்தா ரிறந்தா ரவர்தம்மை
நான்கண் டிருந்து நாணுமே
விரைத்தாண் மலரைப்பெறலாமென்
றெண்ணிவினை விளைக்கின்றேன்
றிரைத்தாழ் கடலிற் பெரும்பிழையே
செய்தே னென்ன செய்வேனே.

வாழாமனத்தின் வழிசென்று வாளா நாளைக் கழிக்கின்ற
பாழா முலகச் சிறுநடையிற் பாவியேனைப் பதிவித்தா
யூழாமெனிலெம்பெருமானேயின் னும்வினையாலொதியனையே
னேழாநரகுக்காளாவே னல்லாற் புகலென் னொளியேற்கே.

திருச்சிற்றம்பலம்.

———o———

## கலிவிண்ணப்பம்.

---

### கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

ஊன்செய்த வெம்புலைக் கூட்டின் பொருட்டிங் குனைமறந்து
நான்செய்த தீமையை நானே நினைக்க நடுங்குகின்றே
னேன்செய் தனையெனக் கேளாது மேலு மிரங்குகின்றாய்
வான்செய்தநாதநின் றண்ணருள்வண்ணமென்வாழ்த்துவனே

பள்ளத்தி லேசெலு நீர்போலென் னுள்ளம் பரப்பதலா
வெள்ளத்தி லேசிறி தாயினு நான்செல்வ தில்லையெந்தாய்
கள்ளத்தி லேசொல்லு கின்றே னலநின் கழலிணையென்
னுள்ளத்தி லேநின்ற வாங்கமை காண்க வுடையவனே.

திருச்சிற்றம்பலம்.

---

## கருணைவிண்ணப்பம்.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சொல்லற் கரிய பெரியபரஞ்
சுடரே முக்கட் சுடர்க்கொழுந்தே
மல்லற் கருமா லயன்முதலோர்
வழுத்தும் பெருஞ்சீர் மணிக்குன்றே
புல்லற் கரிதா மெளியேன்றன்
பிழைகள் யாவும் பொறுத்திந்த
வல்லற் கடலின் றெனையெடுத்தே
யருள்வா யுன்ற னருணலமே.

திருச்சிற்றம்பலம்.

---

## அடிமைப்பதிகம்.

கோயில்

எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உள்ளமறிந் துதவுனம் முடையா னெல்லா
முடையான்மற் றெருகுறையிங் குண்டோவென்
கள்ளமனத் தேனங்தோ களித்திருந்தேன் [னக்
கைவிடுவார் போலிருந்தாய் கருணைக் குன்றே
யெள்ளலுறப் படுவேனிங் கேதுசெய்வே
னெங்கெழுகேன் யார்க்குரைப்பே னின்னுமுன்ற
வள்ளலருட் டிறநோக்கி நிற்கின்றேனென் [ன்
மனத்துயர்போம் வகையருள மதித்திடாயே.

திருச்சிற்றம்பலம்.

---

## உள்ளப்பதிகம்.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

மட்டுப் படாதது மாமறை யாலு மலப்பகையாற்
கட்டுப் படாதது மாலா தியர்தங் கருத்தினுக்குந்
தட்டுப் படாதது பார்முதற் பூதத் தடைகளினு [ளகத்தே.
லொட்டுப் படாதவொன் றுண்டேமுக் கண்ணொடென் னுள்

பேதப் படாதது பற்பல கற்பங்கள் பேர்ந்திடினுஞ்
சேதப் படாதது நன்றிது தீதெனச் செய்கைகளா
லேதப் படாததுள் ளெட்டப் படாததிங் கியாவர்கட்கு[த்தே
மோதப் படாதவொன் றுண்டேமுக் கண்ணொடென் னுள்ளக

திருச்சிற்றம்பலம்.

---

## சரணப்பதிகம்.

### கோயில்

### கலிநிலைத்துறை.

திருச்சிற்றம்பலம்.

மறவாதுனை வாழ்த்து மெய்யன்பரை மாநிலத்தே
யிறவா வகையாட் கொண்டருளிய வீசனேமெய்
யுறவாகிய நின்பத மன்றியொன் றோர்கிலேனுன்
பிறவாநெறி தந்தருளென்பதென் பேசிடாமே.

நாட்டார் நகைசெய்வ ரென்றோ வருணல்கிலாய்நீ
விட்டார் நினையென் னினைப்பாரெனை மேவிலாயேற்
றூட்டா மலையன்றித் துணையொன்றுஞ் சார்ந்திலேனென்
மாட்டாமை யறிந்தருள்வாய் மணிமன்று ளானே.

திருச்சிற்றம்பலம்.

---

## நெஞ்சோடு நெகிழ்தல்.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

துட்ட வஞ்சக நெஞ்சகமேயொன்று
சொல்லக் கேள்கடல் சூழுல கத்திலே
யிட்ட மென்கொ விறையள வேனுமோ
ரின்ப மில்லை யிடைக்கிடை யின்னலா
னட்ட மிக்குறல் கண்டுகண் டேங்கினை
நாணு மின்றிலை நாய்க்குங் கடையை நீ
பட்ட வன்மைக ளெண்ணி லெனக்குடற்
பதைக்கு முள்ளம் பகீலென வேங்குமே.

## அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பெரியபொரு ளனைத்துமுதற் பெரும்பொருளா
மரும்பொருளைப் பேசற் கொண்ணாத்
துரியநிலை யனுபவத்தைச் சுகமயமா
யெங்குமுள்ள தொன்மை தன்னை
யரியபரம் பரமான சிதம்பரத்தே
நடம்புரியு மமுதை நயந்தோ
ருரியபர கதியடைதற் குன்னினையேன்
மனனேநீ யுய்கு வாயே.

சொன்னிலைக்கும் பொருணிலைக்குந் தூரியதா
யானந்தச் சுடரா யனார்
தன்னிலைக்குஞ் சுகநிலைக்கு மெய்ம்மையாந்தா
யருளாழுக்குந் தருவா மென்று
முன்னிலைக்கு நின்னிலைக்குங் காண்பரிதாய
மூவாத முதலாய்ச் சுத்த
நன்னிலைக்கு நிலையாய பசுபதியை
மனனேநீ பயின்றி டாயே.

திருச்சிற்றம்பலம்.

——(0)——

## போதுத்தனித் திருவெண்பா.

நேரிசை

திருச்சிற்றம்பலம்.

வந்திக்கு மெய்யடியார் மாலற்ற வோர்மனத்திற்
சந்திக்கு மெங்கள் சயம்புவே—பந்திக்கும்
வன்மலக்கட் டெல்லாம் வலிகெட் டறநினது
நின்மலக்கட் டண்ணருடா னேர்.

நீலக் களங்கொண்ட நீடொளியே நீள்கங்கை
கோலச் சடைக்கணிந்த கோமளமே-ஞாலத்தி
லெந்தோ சிறியே னருளின்றி வாடுவது
சந்தோட மோநின் றனக்கு.

நான்சிறியே னென்னினுமிந் நானிலத்தி னுன்செய்பிழை
தான்சிறிதோ வன்றுலகிற் றன்பெரிதே-மான்கரத்தோ
யங்ஙனமே னும்முன் னருட்பெருமைக் கிப்பெருமை
யெங்ஙனமென் றுளள மெழும்.

ஆவித் துணையேயென் னாரமுதே நின்னடியைப்
பாவித் துணையேனிப் பாவியேன்-சேவித்து
வாழ்த்தேனின் பொன்னடியில் வந்தென் றலைகுனித்துத்
தாழ்த்தேனென் செய்வேன் றவம்.

என்னரசே நின்னடிக்கீ ழென்னிடரை நீக்கெனநான்
சொன்னதலாற் றாயுடனுஞ் சொன்னேனோ-வின்னுமிந்தத்
துன்பச் சுமையைச் சுமக்க முடியாதென்
றன்பர்க் கருள்வோ யருள்.

அன்னேயென் னப்பாவென் னாருயிர்க்கோ ராதரவே
யென்னேநின் னுள்ள மிரங்கிலையே-பொன்னே
யுடையா ரிடையென் னுளநொந்து வாடிக்
கடையேன் படுந்துயரைக் கண்டு.

பகுதி தகுதி விகுதி யெனும்பாட்டி
லிகலி லிடையை யிரட்டித்-தகவி
னருச்சித்தான் முன்னு மதுகடையாங் கண்டீர்
திருச்சிற் சபையானைச் சேர்ந்து.

இவ்வழியிற் செல்லாதே யென்னுடையான் றன்னடிசே
ரவ்வழியிற் செல்லென் றடிக்கடிக்குச்-செவ்வழியிற்
சொன்னாலுங் கேட்கிலைநீ துட்டமன மேயுனக்கிங்
கென்னா லுறவே தினி.

திருச்சிற்றம்பலம்.

---

## தனித்திருப்புலம்பல்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

திங்களை விளங்குஞ் சடைத்தருவைத்
தீம்பாற் சுவையைச் செந்தேனைச்
செங்கை மருவுஞ் செழுங்கனியைச்
சீரார் முக்கட் செங்கரும்பை
மங்கை மலையான் மணந்தபெரு
வாழ்வைப் பவள மலைதன்னை
யெங்கள் பெருமான் றனையந்தோ
வென்னே யெண்ணா திருந்தேனே.

அன்ப ரிதய மலர்க்கோயி
லமர்ந்த பரமா னந்தத்தைத்
துன்ப மகலச் சுகமளிக்குந்
தூய துணையைச் சுயஞ்சுடரை
வன்ப ரிடத்தின் மருவாத
மணியை மணியார் மிடற்றானை
யின்ப நிறைவை யிறையோனை
யென்னே யெண்ணா திருந்தேனே.

ஒருமைப் பயனை யொருமைநெறி
யுணர்ந்தா ருணர்வி னுள்ளுணர்வைப்
பெருமைக் கதியைப் பசுபதியைப்
பெரியோ ரெவர்க்கும் பெரியோனை
யருமைக் களத்திற் கருமையணி
யம்மான் றன்னை யெம்மானை
யிருமைப் பயனுந் தருவானை
யென்னே யெண்ணா திருந்தேனே.

கறையோர் கண்டத் தணிந்தருளுங்
கருணா நிதியைக் கண்ணுதலை
மறையோ னெடுமாற் கரியசிவ
மலையை யலையில வாரிதியைப்
பொறையோ ருள்ளம் புகுந்தொளிரும்
புனித வொளியைப் பூரணனை
யிறையோன் றன்னை யந்தோநா
னென்னே யெண்ணா திருந்தேனே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்புகழ்ச்சி.

### கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தாயுந் தந்தையுந் தெய்வமுங் குருவுந்
தாங்கு கின்றதோர் தலைவனும் பொருளு
மாயு மின்பமு மன்புமெய் யறிவு
மனைத்து நீயென வாதரித் திருந்தே

னேயு மென்னள விரக்கமொன் றிலேயே
லென்செய் வேனிதை யார்க்கெடுத் துரைப்பேன்
சேயு நின்னரு ணசையுறுங் கண்டாய்
தில்லை மன்றிடைத் திகழொளி விளக்கே.

அருள்பழுத் தோங்குங் கற்பகத் தருவே
யருண்மருந் தொளிர்குணக் குன்றே
யருளெனு மமுதந் தருமொரு கடலே
யருட்கிர ணங்கொளுஞ் சுடரே
யருளொளி வீசு மரும்பெறன் மணியே
யருட்சுவை கனிந்தசெம் பாகே
யருண்மணம் வீசு மொருதனி மலரே
வருண்மய மாம்பர சிவமே.

திருச்சிற்றம்பலம்.

---

## தனித்திருவிருத்தம்.

### கட்டளைக்கலித்துறை

திருச்சிற்றம்பலம்.

நீர்பூத்த வேணியு மானந்தம் பூத்து நிறைமதியின்
சீர்பூத் தமுத விளநகை பூத்த திருமுகமும்
பார்பூத்த பச்சைப் பசுங்கொடி பூத்தசெம் பாகமுமோர்
கார்பூத்த கண்டமுங் கண்பூத்த காலுமென் கண்விருந்தே.

ஆயிரங் கார்முகி லீர்விழி நீர்தர வையநின்பாற்
சேயிரங் காரெனக் கென்றேநின் பொற்பதஞ் சிந்திக்கின்றே
னீயிரங் காயெனி லென்செய்கு வேனின் னிலத்திற்பெற்ற
தாயிரங் காளென்ப துண்டோதன் பிள்ளை தளர்ச்சிகண்டே.

## கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

செம்பவளத் தனிக்குன்றே யருளா னந்தச்
செழுங்கனியே முக்கண்ணுடைத் தேவே மூவா
வம்புவிநீ ரனல்வளிவா னாதி யாய
வரசேயென் னுருயிர்க்கோ ரரண மாகுஞ்
சம்புசிவ சயம்புவே சங்க ராவெண்
சைலம்வளர் தெய்வதவான் றருவே மிக்க
வம்பவிழ்மென் குழலொருபால் விளங்க வோங்கு
மழவிடைமேல் வருங்காட்சி வழங்கு வாயே.

வே று.

நீடுகின்ற மாமறையு நெடுமாலுந்
திசைமுகனு நிமல வாழ்க்கை
நாடுகின்ற முனிவரரு முருத்திரருந்
தேடவரு ணட்டங்கொண்டு
பாடுகின்ற மெய்யடிய ருளம்விரும்பி
யானந்தப் படிவ மாகி
யாடுகின்ற மாமணியை யாரமுதை
நினைந்துநினைந் தன்பு செய்வாம்.

வே று.

மறைமுடி விளக்கே போற்றி மாணிக்க மலையே போற்றி
கறைமணி கண்ட போற்றி கண்ணுதற் கரும்பே போற்றி
பிறைமுடிச்சடைகொண்டோங்குமபேரருட்குன்றேபோற்றி
சிறைதவிர்த் தெனையாட்கொண்ட சிவசிவபோற்றிபோற்றி.

வே று.

செய்வகை யறியேன் மன்றுண்மா மணிநின்
றிருவுளக் குறிப்பையுந் தெரியே
னுய்வகை யறியே னுணர்விலே னந்தோ
வுறுகண்மே லுறுங்கொலென் றுலேந்தேன்

மெய்வகை யடையேன் வேறெவர்க் குரைப்பேன்
வினையனே னென்செய விரைகேன்
பொய்வகை யுடையே னெங்ஙனம் புகுகேன்
புலையனேன் புகலறி யேனே.

வேறு.

நிதியைநினைந் துனைமறந்த மதியைநினைந்
தழுகேனோ நிமலா னந்தக்
கதியையிகழ்ந் திருளவிழைந்த விதியைநினைந்
தழுகேனோ கண்போல் வாய்ந்த
பதியையுனைப் பாடாத பாட்டைநினைந்
தழுகேனோ பாழ்ற்று நெஞ்சச்
சதியைநினைந் தழுகேனோ யாதுகுறித்
தழுகேனித் தமிய னேனே.

தாய்தடை யென்றேன் பின்னர்த்
தாரமே தடையென் றேனுன்
சேய்தடை யென்றே னிந்தச்
சிறுதடை யெல்லாந் தீர்ந்து
தோய்தடைச் சிறியே னின்னுந்
துறந்திலே னெனைத்த டுக்க
வேய்தடை யாதோ வெந்தா
யென்செய்கே னென்செய் கேனே.

எண்கடந்த வுயிர்கடொறு மொளியாய் மேவி
யிருந்தருளும் பெருவாழ்வே யிறையே நின்றன்
விண்கடந்த பெரும்பதத்தை விரும்பேன் றூய்மை
விரும்புகிலே னின்னருளை விழைந்தி லேனுண்
பெண்கடந்த மயலெனுமோர் முருட்டுப் பேயாற்
பிடியுண்டே னடியுண்ட பிஞ்சு போன்றேன்

கண்கடந்த குருட்டூமர் கதைபோ னின்சீர்
கண்டுரைப்ப லென்கேளு கடைய னேனே.

களனுருகு மலர்மணம்போற் கலந்தெங்கு
நிறைந்தோய்நின் கருணைக் கந்தோ
முளனுருகும் வலியபராய் முருநிருகு
முருகாத முறைசேர் கல்லும்
வளனுருகு மலையுருகு மண்ணுனுருகு
மாமுருகு மதியி லேன்ற
னுள்ளுருகும் வகையிலையென் செய்கேனு
னேன்பிறந்தே னுதிய னேனே.

மாற்றரிய பசும்பொன்னே மணியேயென்
கண்ணேகண் மணியே யார்க்குந்
தோற்றரிய சுயஞ்சுடரே யானந்தச்
செழுந்தேனே சோதி யேநீ
போற்றரிய சிறியேனைப் புறம்விடினும்
வேற்றவர்பாற் போகேன் வேதந்
தேற்றரிய திருவடிக்கண் பழிவிளைப்பே
னின்னுனை சிறிய னேனே.

கலைபயின்று நெறியொழுகுங் கருத்துடையே
னலனின்னைக் கனவி லேனு
மலைபயின்ற பெருங்குணத்தெம் வள்ளலே
யெனத்துதியேன் வஞ்ச மில்லா
நிலைபயின்ற நல்லோர்தந் நேசமிலேன்
கைதவமே நினைப்பே னந்தோ
வுலைபயின்ற வரக்கெனநெஞ் சுருகேனு
னென்பிறந்தே னுதிய னேனே.

இரும்புன்னை மலர்ச்சடையா யிவ்வுலகிற்
சிலர்தங்கட் கென்று வாய்த்த
வரும்பின்னை மார்பகத்தோ னயனாதி
சிறுதெய்வ மரபென் றோதுங்
கரும்பொன்னைச் செம்பொன்னிற் கைவிடா
திருக்கின்றார் கடைய னேற்கே
தரும்பொன்னே மாற்றழிக்கு மரும்பொன்னீ
கிடைத்துமுனைத் தழுவி லேனே.

கட்டளைக் கலித்துறை.

வேம்புக்குந் தண்ணிய நீர்விடு கின்றனர் வெவ்விடஞ்சேர்
பாம்புக்கும் பாலுண வீகின் றனரிப் படிமிசையான்
வீம்புக்குந் தீம்புக்கு மானே னெனினும் விடேலெனைநீ
தேம்புக்கும் வார்சடைத் தேவே கருணைச் சிவக்கொழுந்தே

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பொல்லா வாழ்க்கைத் துயரமெனும்
புணரிப் பெருக்கில் வீழ்ந்தழுந்திப்
பல்லார் நகைக்கப் பாவிபடும்
பாட்டை முழுதும் பார்த்திருந்துங்
கல்லா லமர்ந்தீ ரென்னிரண்டு
கண்க ளனையீர் கறைமிடற்றீ
ரெல்லா முடையீர் மால்விடையீ
ரென்னே யிரங்கி யருளீரே.

நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா.

நேசனுநீ சுற்றமுநீ நேர்நின் றளித்துவரு
மீசனுநீ யின்றாளு மெங்கையுநீ யென்றேநின்
றேசுறுசீ ரைந்தெழுத்துஞ் செப்புகின்ற நாயேனை
யாசகலும் வண்ண மருள்புரிந்தா லாகாதோ.

## கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அருளா ரமுதே யரசேநின்
னடியே கொடியேன் முறையேயோ
விருள்சேர் மனத்தோ டடருழந்தே
னெந்தா யிதுதான் முறையேயோ
மருள்சேர் மடவார் மயலாலே
மாழ்கின் றேனுன் முறையேயோ
தெருளோர் சிறிது மறியாதே
திகையா நின்றேன் முறையேயோ.

ஒழியாக் கவலை யுறுகின்றே
னுடையாய் முறையோ முறையேயோ
வழியாக் கருணைக் கடலேயென்
னரசே முறையோ முறையேயோ
பொழியாப் புயலே யனையார்பால்
புகுவித் தனையோ முறையேயோ
விழியாத் திரிதந் துழல்கின்றே
னிறைவா முறையோ முறையேயோ.

வேறு.

மதியொளிர் சங்கைச் சடைப்பெருங் கருணை
வள்ளலே தெள்ளிய வமுதே
நிதியொளிர் வாழ்க்கை யிந்திரன் முதலோர்
நிலைத்தவான் செல்வமு மண்ணிற்
பதியொளிர் வாழ்க்கை மணிமுடி யரசர்
படைத்திடுஞ் செல்வமும் வேண்டேன்
கதியொளிர் நினது திருவருட் செல்வக்
களிப்பையே காங்க்ஷிக்கின் றனனே.

## கலிவிருத்தம்.

வைவமென் றெழுகின்றவர் தமக்கு நல்வாழ்வு
செய்வமென் றெழுகின்ற மெய்த்திரு வருட்செயலுஞ்
சைவமென்பதுஞ் சைவத்திற் சாற்றிடுந் தலைமைத்
தெய்வமென்பது மென்னளவில்லையென் செய்வேன்.

## அறுசீர்க் கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐயரேயுமதடியனுறுகி
லடிகணீரெனநாண்டவராகிற்
பொய்யனேனுளந்தவலமுமையமும்
புன்கணுந்தவிர்த்தருளுதல்வேண்டுந்
தையலோர்புறநின்றுளங்களிப்பச்
சச்சிதானந்தத்தனிநடம்புரியு
மெய்யரேமிகுதுய்யரேதரும
விடையரேயென்றன்விழியமர்ந்தவரே.

## வேறு.

பொன்னென்கோ மணியென்கோ புனிதவொளித்
திரளென்கோ பொற்பினோங்கு
மின்னென்கோ விளக்கென்கோ விரிசுடர்க்கோர்
சுடரென்கோ வினையனேன்யா
னென்னென்கோ வெள்ளென்கோ வெம்பெருமான்
திருமேனி யிருந்த வண்ணை
முன்னென்கோ தருதவத்தாற் கண்டுகளித்
திடப் பெற்றேன் முக்கண் மூர்த்தி.

திருச்சிற்றம்பலம்.

---

## அறநிலைவிளக்கம்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

மருவாணைப் பெண்ணாக்கி யொருகணத்திற்
கண்விழித்து வயங்கு மப்பெண்
ணுருவாணை யுருவாக்கி யிறந்தவரை
யெழுப்புகின்ற வுறுவனேனுங்
கருவானை யுறவிரங்கா துயிருடம்பைக்
கடிந்துண்ணுங் கருத்தனேலெங்
குருவாணை யெமதுசிவக் கொழுந்தானை
ஞானியெனக் கூறொ ணாதே.

திருச்சிற்றம்பலம்.

---

## அருணிலை விளக்கம்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மெய்விளக்கே விளக்கல்லால் வேறுவிளக்
கில்லையென்றார் மேலோர் நானும்
பொய்விளக்கே விளக்கெனவுட் பொங்கிவழி
கின்றேனோர் புதுமை யன்றே
செய்விளக்கும் புகழுடைய சென்னநகர்
நண்பர்களே செப்பக் கேளீர்
நெய்விளக்கே போன்றொருதண் ணீர்விளக்கு
மெரிந்ததுசந் நிதியின் முன்னே.

திருச்சிற்றம்பலம்.

---

# திருமருந்தருணிலை.

---

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருநெடுமா லயன்றேடத் தூரியநடு
வொளித்ததெனத் தெரிந்தோர் சொல்லு
மொருகருணை மருந்துதிரு வம்பலத்தே
யிருந்திடக்கண் டுவந்தே னந்தோ
வருவுருவங் கடந்ததுபே ரானந்த
வடிவதுநல் லருள்வாய்ந் துள்ள
திருமையுநன் கறிந்ததெல்லாம் வல்லதுபேர்
நடராச னென்ப தம்மா.

திருச்சிற்றம்பலம்.

---

# திருவருள்விலாசம்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆண்டவனீ யாகிலுனக் கடியனுநா னாகி
லருளுடையா யின்றிரவி லருளிறையாய் வந்து
நீண்டவனே முதலியருந் தீண்டரிதாம் பொருளின்
நிலைகாட்டி யடிமுடியி னெறிமுழுதுங் காட்டி
விண்டவனே காலையினீ விழித்தவுட னெழுந்து
வினைமுடித்துப் புரிதியது விளங்குமெனப் புகல்வாய்
தாண்டவனே யருட்பொதுவிற் றனிமுதலே கருணைத்
தடங்கடலே நெடுந்தகையே சங்கரனே சிவனே.

## அம்மை திருப்பதிகம்.

### கோயில்

### இரட்டைக் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்யாத மொழியுமயல் செய்யாத செயலும்வீண்
போகாத நாளும் விடயம்
புரியாத மனமுமுட் பிரியாத சாந்தமும்
புந்திதளராத நிலையும்
மெய்யாத வாழ்வும்வே றெண்ணாத நிறைவுநினை
யென்றுமற வாத நெறியு
மிறவாத தகவுமேற் பிறவாத கதியுமிவ்
வேழையேற் கருள்செய் கண்டாய்
கொய்யாது குவியாது குமையாது மணம்வீசு
கோமளத் தெய்வ மலரே
கோவாத முத்தமே குறையாத மதியமே
கோடாத மணிவி ளக்கே
மையயா னனங்கொண்ட தில்லையம்பதி மருவு
மண்ணலார் மகிழு மணியே
யகிலாண்ட முஞ்சரா சரமுமீன் றருள்பரசி
வானந்த வல்லி யுமையே. (க)

சூரிட்ட நடையிலென் போரிட்ட மனதைநான்
சொல்லிட்ட முடன ணைத்து
துன்றிட்ட மோனமெனு நன்றிட்ட வமுதுண்டு
சும்மா விருந்தி யென்றாற்
காரிட் டிதற்குமுன் யாரிட்ட சாபமோ
கண்டிலே னம்மம் மவோர்

கணமேனு நில்லாது பொல்லாது புவியிற்
கறங்கெனச் சுழல்கின் றதே
தாரிட்ட நீயருட் சீரிட்டி டாயெனிற்
றாழ்பிறவி தன்னி லதுதான்
றன்னைவிழ்த் துவதன்றி யென்னையும் வீழ்த்துமித்
தமியனே னென்செய் குவே
னூரிட்ட சடையாளர் தில்லையம் பதிமருவு
மண்ணலார் மகிழு மணியே
யகிலாண்ட மும்சரா சரமுமீன் றருள்பரசி
வானந்த வல்லி யுமையே. (உ)

திருச்சிற்றம்பலம்.

---

கலைமகளார் திருப்பதிகம்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சங்கம்வளர்ந் திடவளர்ந்த தமிழ்க்கொடியைச்
சரச்சுவதி தன்னை யன்பர்
துங்கமுறக் கலைபயிற்றி யுணர்வளிக்குங்
கலைஞானத் தோகை தன்னைத்
திங்களுதற் றிருவையருட் குருவைமல
ரோங்கியபெண் டெய்வந் தன்னைத்
தங்கமலை முலையாளைக் கலையாளைத்
தொழுதுபுகழ் சாற்று கிற்பாம். (க)

கலைபயின்ற வுளத்தினிக்குங் கரும்பினைமுக்
கனியையருட் கடலை யோங்கு
நிலைபயின்ற முனிவரருந் தொழுதேத்த
நான்முகனார் நீண்ட நாவிற்

றலைபயின்ற மறைபயின்று மூவுலகுங்
காக்கின்ற தாயை வாகைச்
சிலைபயின்ற நுதலாளைக் கலைவாணி
யம்மையைநாம் சிந்திப் போமே. (உ)

திருச்சிற்றம்பலம்.

---

## ஆனந்தக்களிப்பு.

திருச்சிற்றம்பலம்.

நல்ல மருந்திம் மருந்து - சுக
நல்கும் வைத்திய நாதமருந்து நல்ல

அருள்வடி வான மருந்து - நம்முள்
அற்புதமாக வமர்ந்த மருந்து
இருளற வோங்கு மருந்து - அன்பர்க்
கின்புருவாக விருந்த மருந்து நல்ல (க)

சஞ்சலந் தீர்க்கு மருந்து - எங்குந்
தானே தானாகித் தழைக்கு மருந்து
அஞ்சலென் றருளு மருந்து - சச்சி
தானந்த மாக வமர்ந்த மருந்து நல்ல (உ)

பிறப்பை யொழிக்கு மருந்து - பார்க்கும்
பேசப்படாத பெரிய மருந்து
இறப்பைத் தவிர்க்கு மருந்து - என்னு
ளென்று மதுரித் தினிக்கு மருந்து நல்ல (ங)

அம்பலத் தாடு மருந்து - பர
யானந்த வெள்ளத் தழுத்து மருந்து

எம்பல மாகு மருந்து - வேறு
றென்னுந் தலத்தி லிருக்கு மருந்து நல்ல (ச)

பால்வண்ண னாகு மருந்து - அதிற்
பச்சை நிறமும் படர்ந்த மருந்து
நூல்வண்ண னாடு மருந்து - உள்ளே
நோக்கு கின்றோர்களை நோக்குமருந்து நல்ல (ரு)

பார்க்கப் பசிபோ மருந்து - தன்னை
பாரா தவர்களைச் சேரா மருந்து
கூர்க்கத் தெரிந்த மருந்து - அது
கூல மருந்தென்று கொண்ட மருந்து நல்ல (சா)

கோதிலா தோங்கு மருந்து - அன்பர்
கொள்ளைகொண் டுண்ணக் குலாவுமருந்து
மாதொரு பாக மருந்து - என்னை
வாழ்வித்த வென்கண் மணியாமருந்து நல்ல (எ)

ஏகவுரு வா மருந்து - மிக்க
வேழைகளுக்கு மிரங்கு மருந்து
சோகந் தவிர்க்கு மருந்து-பரஞ்
சோதியென் றன்பர் துதிக்கு மருந்து நல்ல (அ)

வாய் பிடியாத மருந்து - மத
வாதமும் பித்தமு மாய்க்கு மருந்து
நோய் பொடியாக்கு மருந்து - அன்பர்
நோக்கிய ஞேக்கினுண் ணுேக்குமருந்து நல்ல(கூ)

பெண்ணுசை தீர்க்கு மருந்து-பொருட்
பேராசை யெல்லாம் பிளக்கு மருந்து

மண்ணாசை தீர்க்கு மருந்து-எல்லாம்
வல்லமருந் தென்று வாழ்த்துமருந்து நல்ல (க0)

என்றுங் கெடாத மருந்து-வரு
மெல்லாப் பிணிக்கு மிதுவே மருந்து
துன்றுஞ் சிவோக மருந்து-நம்மைச்
சூழ்ந்திரு மைக்குந் துணையாமருந்து நல்ல (கக)

மறந்தா லொளிக்கு மருந்து-தன்னை
மறவாத வருள் வழங்கு மருந்து
இறந்தா லெழுப்பு மருந்து-எனக்
கென்றுந் துணையா யிருக்குமருந்து நல்ல (கஉ)

கரும்பி னினிக்கு மருந்து-கடுங்
கண்டகர்க் கெல்லாங் கசக்குமருந்து
இரும்பைக் குழைக்கு மருந்து-பே
ரின்ப வெள்ளத்தே யிழுக்கு மருந்து நல்ல (கங)

அணிமணி கண்ட மருந்து-அரு
ளானந்த சுத்தவகண்ட மருந்து
பிணிதவி ரின்ப மருந்து-யார்க்கும்
பேசாமருந்தென்று பேசு மருந்து நல்ல (கச)

மூவர்க்கரிய மருந்து - செல்வ
முத்துக் குமாரனை யீன்ற மருந்து
நாவிற் கினிய மருந்து-தைய
லுயகி கண்டு தழுவு மருந்து (கரு)

நல்லமருந் திம்மருந்து - சுக நல்கும்
வைத்திய நாதமருந்து.

திருச்சிற்றம்பலம்.

## பாங்கியர்க் கறிவுறுத்தல்.

---

### கண்ணிகள்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலத்திலாடுகின்றார் பாங்கிமாரே - அவர்
ஆட்டங்கண்டு நாட்டங்கொண்டேன் பாங்கிமாரே.

ஆடுகின்ற சேவடிமேற் பாங்கிமாரே - மிக
ஆசைகொண்டு வாடுகின்றேன் பாங்கிமாரே.

இன்பவடிவாய்ச் சபையிற் பாங்கிமாரே - நட
மிட்டவர்மே லிட்டம்வைத்தேன் பாங்கிமாரே.

ஈனவுடற் கிச்சைவையேன் பாங்கிமாரே - நட
நேசர்தமை யெய்தும் வண்ணம் பாங்கிமாரே.

உத்தமர்பொன் னம்பலத்தே பாங்கிமாரே - யின்ப
வுருவாகி யோங்குகின்றார் பாங்கிமாரே.

கற்பனையெல் லாங்கடந்த பாங்கிமாரே-யென்றன்
கற்பனைக்குட் படுவாரோ பாங்கிமாரே.

கண்டிலர்நான் படும்பாடு பாங்கிமாரே - மூன்று
கண்ணுடையா ரென்பாரையோ பாங்கிமாரே.

காமனைக்கண் ணலெரித்தார் பாங்கிமாரே-என்றன்
காதலைக்கண் டறிவாரோ பாங்கிமாரே.

காணவிழைந்தே னவரைப் பாங்கிமாரே-கொண்டு
காட்டுவாரை யறிந்திலேன் பாங்கிமாரே.

கிட்டவரா வேண்டுமென்றார் பாங்கிமாரே-நான்
கிட்டுமுன்னே யெட்டநின்றார் பாங்கிமாரே.

கிள்ளையைத் தூதாவிடுத்தேன் பாங்கிமாரே-அது
கேட்டுவரக் காணேனையோ பாங்கிமாரே.

குற்றமெல்லாங் குணமாகப் பாங்கிமாரே-கொள்ளும்
கொற்றவரென் கொழுநர்காண் பாங்கிமாரே.
குற்றமொன்றுஞ் செய்தறியேன் பாங்கிமாரே-என்னைக்
கொண்டுகுலம் பேசுவாரோ பாங்கிமாரே.
குஞ்சிதபொற் பாதங்கண்டாற் பாங்கிமாரே-உள்ள
குறையெல்லாந் தீருங்கண்டீர் பாங்கிமாரே.
கூடல் விழைந்தே னவரைப் பாங்கிமாரே - அது
கூடும் வண்ணம் கூட்டிடுவீர் பாங்கிமாரே.

திருச்சிற்றம்பலம்.

---

## வெண்ணிலா.

திருச்சிற்றம்பலம்.

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலா-ஒரு
தந்திரம்நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே.
நாதமுடி மேலிருந்த வெண்ணிலாவே-அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே.
அந்தரங்க சேவைசெய்ய வெண்ணிலாவே-எங்க
ளையர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலாவே.
வேதமுடி மேலிருந்த வெண்ணிலாவே-மல
வேதையுள வேதுசொல்லாய் வெண்ணிலாவே.
குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலாவே-அந்த
குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலாவே.
வித்திலாம லேவிளைந்த வெண்ணிலாவே-நீதான்
விளைந்தவண்ண மேதுசொல்லாய் வெண்ணிலாவே.
முப்பொருளுமொன்றதென்பார் வெண்ணிலாவே-அந்த
மூன்றுமொன்றாய் முடிந்ததென்ன வெண்ணிலாவே.

நானதுவாய் நிற்கும்வண்ணங் வெண்ணிலாவே-ஒரு
ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலாவே.
வாசிவாசி யென்றுரைத்தார் வெண்ணிலாவே-அந்த
வாசியென்ன பேசுகண்டாய் வெண்ணிலாவே.
ஐந்தலைப்பாம் பாட்டுகின்றார் வெண்ணிலாவே-அவர்
அம்பலத்தி னின்றதென்ன வெண்ணிலாவே.
ஓரெழுத்திலேந் துண்டென்பார் வெண்ணிலாவே-அது
ஊமையெழுத் தாவதென்ன வெண்ணிலாவே.
அம்பலத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே-அவர்
ஆடுகின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே.
அந்தரத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே-அவர்
ஆடும்வகை யெப்படியோ வெண்ணிலாவே.
அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலாவே-எங்கு
மாகின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே.
அம்பரத்திலாடு கின்றார் வெண்ணிலாவே-என்னை
ஆட்டுகின்றா ரிம்பரத்தே வெண்ணிலாவே.

திருச்சிற்றம்பலம்.

---

## நடேசர்கொம்மி.

### பல்லவி.

கொம்மியடிப் பெண்கள் கொம்மியடி - யிரு
கொங்கை குலுங்கவே கொம்மியடி

### அநுபல்லவி.

நம்மையாளும் பொன் னம்பலவாணனை
நாடிக் கொம்மி யடியுங்கடி-பதம்
பாடிக் கொம்மி யடியுங்கடி

சரணங்கள்.

காமமகற்றிய தூயனடி சிவ
காம சவுந்தரி நேயனடி
மாமறை யோதுசெவ் வாயனடி - மணி
மன்றெனு ஞானவா காயனடி (க)

ஆனந்தத் தாண்டவ ராஜனடி - நமை
யாட்கொண் டருளிய தேஜனடி
வானந்த மாமலை மங்கைமகிழ்-வடி
வாளனடி மணவாளனடி (உ)

கல்லைக் கனிவிக்குஞ் சுத்தனடி-முடி
கங்கைக்கருளிய கர்த்தனடி
தில்லைச்சிதம்பர சித்தனடி தேவ
சிங்கமடியுயர் தங்கமடி. (௩)

பெண்ணொரு பால்வைத்த மத்தனடி-சிறு
பிள்ளைக்கறி கொண்டபித்தனடி
நண்ணி நமக்கரு ளத்தனடி-மிக
நல்லனடி யெல்லாம் வல்லனடி (௪)

அம்பலத் தாடல்செய் யையனடி-பன்ப
ரன்புக் கெளிதரு மெய்யனடி
தும்பை முடிக்கணி தூயனடி-சுயஞ்
சோதியடி பரஞ் சோதியடி. (௫)

திருச்சிற்றம்பலம்.

# சிலதாஸம்வாதம்.

## கண்ணிகள்.

திருச்சிற்றம்பலம்.

தண்மதி யொண்முகப் பெண்மணியே யுன்னைத்
 தான்கொண்ட நாயக ராரேடி
யண்மையிற் பொன்னணி யம்பலத் தாடல்செய்
 யைய ரமுத ரழகரடி (க)

செங்கயற் கண்மட மங்கைநல்லா யுன்றன்
 செங்கை பிடித்தவ ராரேடி
யங்கய லாரன்று பொன்னம் பலத்தெங்க
 ளானந்தத் தாண்டவ ராஜனடி (உ)

கன்னற் சுவைமொழி மின்னிடையா யுன்னைக்
 கன்னி யழித்தவ ராரேடி
யுன்னற் கரியபொன் னம்பலத் தாடல்செய்
 யுத்தம ரானந்த சித்தரடி (ங)

நிமையி லாதபெண் மாமயிலே யுன்னைச்
 சேர்ந்து கலந்தவ ராரேடி
தாம முடிக்கணிந் தம்பலத்தே யின்பத்
 தாண்டவஞ் செய்யுஞ் சதுரரடி (ச)

அன்ன நடைப்பெண்க ளாரமுதே யுன்னை
 யன்பிற் புணர்ந்தவ ராரேடி
துன்ன லுடையின ரம்பலத்தே நின்ற
 தூய திருநட ராயரடி (ரு)

காரள கப்பெண் சிகாமணியே யுன்றன்
 கற்பை யழித்தவ ராரேடி
பேரள வைக்கடந் தம்பலத்தே நின்ற
 பித்தர் பரானந்த நித்தரடி (சு)

திருச்சிற்றம்பலம்.

கீர்த்தனை - இராகம் தோடி; ஆதிதாளம்.

பல்லவி.

தெண்டனிட்டே னென்று சொல்லடி-சுவாமிக்கு நான்
தெண்டனிட்டே னென்று சொல்லடி

அநுபல்லவி.

தண்டலை விளங்குந்தில்லைத் தலத்திற் பொன்னம்பலத்தே
கண்டவர் மயங்கவேடங் கட்டியாடுகின்றவர்க்கு (தெண்)

சரணங்கள்.

கற்பூரவாசம் வீசும் பொற்பார்திருமுகத்தே
கனிந்த புன்னகையாடக் கருணைக் கடைக்கணோட
அற்பார் பொன்னம்பலத்தே யானந்தத்தாண்டவ
மாடிக்கொண்டே யென்னை யாட்டங்கண்டாருக்கு (தெ)

இழிந்தாலு நம்மையிங்கே யேற்றுவா ரென்றடைந்தால்
ஏற்றுவார் போலேபின்னு மிழியவைப்பாருக்கு
பழந்தான் நழுவிமெல்லப் பாலில் விழுந்த தென்ன
பசபசப் பசப்பியன்பர் பண்டம் பறிப்பவர்க்கு (தெ)

சுட்டதிருநீறுபூசி தொந்தோமென் றாடுவார்க்குத்
தோன்றுதலை மாலையணி தோள்விளங்க வருவார்க்குப்
பிட்டுக்காசைப் பட்டுமாறன் பிரம்படிப் பட்டவர்க்கு
பிள்ளைக்கறிக் காசைகொண்ட கள்ளத்தவ வேடருக்கு ()

வாழ்ந்தாரை மேன்மேலும் வாழச்செய்பவருக்கு
மாசுபறித்தவர் கையிற் காசுபறிக்கின்றவர்க்குத்
தாழ்ந்தாரை யடிக்கடித் தாழக் காண்பவருக்குத்
தானாகி நானாகித் தனியே நின்றவருக்கு (தெ)

ஆதியந்த நடுவில்லா ஆனந்த நாடருக்கு
அண்டருயிர் காத்த மணி கண்ட சசிகண்டருக்கு

சோதிமய மாய்விளங்குந் தூயவடிவாளருக்குத்
தொண்டர்குடிகெடுக்கவே துஜங்கட்டிக்கொண்டவர்க்கு()

பாட்டுக்காசைப்பட்டு முன்னம் பரவைதன்வாயிலிற்போய்
பண்புரைத்துத் தூதனென்றே பட்டங்கட்டிக் கொண்ட
வீட்டுக்காசைப்படுவாரை வீட்டைவிட்டுத்துரத்தியே[வர்க்கு
வேட்டாண்டியாயுலகிலோட்டாண்டியாக்குவார்க்கு (தெ)

தாய்வயிற்றிற் பிறவாது தானேமுளைத்தவர்க்கு
சாதிகுலமறியாது தாண்டவஞ்செய் கின்றவர்க்கு
ஏயதொழி லருளு மென்பிராணநாயகர்க்கு
ஏமாந்தவரை யெல்லா மேமாத்து மீசருக்கு. (தெ)

திருச்சிற்றம்பலம்.

---

கீர்த்தனை-இராகம் காம்போதி; தாளம்-ஆதி.

பல்லவி.

இன்னந்தயவு வரவிலையா-உனக்கென்மீதி
லென்ன வர்மஞ் சொலையா.

சரணங்கள்.

அன்னம்பாலிக்குந்தில்லைப் பொன்னம்பலத்திலாடும்
அரசே யரசே யரசேயென் றலறவும் (இன்னந்)

சின்னஞ் சிறுவயதி லென்னை யடிமைகொண்ட
சிவமே சிவமே சிவமேயென் றலறவும் (இன்னந்)

முன்னம் பிழைபொறுத்தா யின்னம்பொறுத லிட்டான்
முறையோமுறையோமுறையோவென்றலறவும்(இன்னந்)

தன்னையறியாவென்னை யின்னலுறச் செய்தாயே
தகுமோ தகுமோ தகுமோவென் றலறவும் (இன்னந்)

பண்டு மகிழ்ந் தென்னையாட் கொண்டு கருணைசெய்த
பரமே பரமே பரமேயென் றலறவும் (இன்னந்

கொண்டு குலம் பேசுவா ருண்டோ வுலகிலெங்கள்
குருவே குருவே குருவே யென்றலறவும் (இன்னந்

திருச்சிற்றம்பலம்.

---

நற்றாய் கவன்றது.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஓடுவா டில்லைத் திருச்சிற் றம்பலமென்
றாருகுவா ளுணர்வில ளாகித்
தேடுவா டிகைப்பா டியங்குவா ளையோ
தெய்வமே தெய்வமே யென்பாள்
பாடுவாள் பதைப்பாள் பதறுவா ளென்பெண்
பாவிகாண் பாவிகா ணென்பாள்
வாடுவாண் மயங்கி வருந்துவா ளிருந்து
வலவினை யேன்பெற்ற மகளே. (க)

திருவெலா மளிக்குந் தெய்வமென் கின்றா
டிருச்சிற் றம்பலவ னென்கின்றா
ளொருவெலா முடைய வொருவனென் கின்றா
ளுச்சிமேற் கரங்குவிக் கின்றாள்
கருவெலாங் கடந்தாங் கவன்றிருமேனி
காண்பதெந் நாள்கொலென் கின்றாள்
மருவெலா மயங்கு மலர்க்குழன் முடியாள்
வருந்துகின் றாளென்றன் மகளே. (உ)

மனறுடை நடிகக்கு மணாளனே யலலான
மதிப்பனோ பிறனையென் கின்றாள்
வன்றுயர் நீக்கு மவன்றிரு வடியை
மறப்பனோ கணமுமென் கின்றா
ளொன்று மில்லவனின் றுரைக்கினு மெல்லா
முடையவ னாகுமென் கின்றா
ளொன்றுதல் பிறழ்த வினியுறே னென்றே
பொற்றொடி பொங்கு கின்றாளே (௯)

திருச்சிற்றம்பலம்.

---

சல்லாபலகரி.

கலிச் சந்தவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சுந்தர நீறணி சுந்தரர் நடனத் தொழில் வல்லார்
வந்தன ரிங்கே வந்தன மென்றேன் மாதேநீ
மந்தண மிதுகே ளந்தண மிலநம் வாழ்வெல்லா
மந்தர மென்றா ரென்னடி யம்மா வவர்சூதே. (க)

நம்பல மாமென நன்மனை புக்கார் நடராஜ
ரெம்பல மாவீ ரெம்பெருமானீ ரேயென்றேன்
வம்பல மடவா யெம்முடை யின்ப வாழ்வெல்லா
மம்பல மென்றா ரென்னடி யம்மா வவர்சூதே. (உ)

திருச்சிற்றம்பலம்.

---

## வேட்கைக் கொத்து.

## தலைமகள் பாங்கியோடு கூறல்.

—o—

எண்சீர்க் கழிநெடிலடி சந்த விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

விண்படைத்த புகழ்த்தில்லை யம்பலத்தா னெவர்க்கும்
மேலானு னன்பருள மேவு நடராஜன்
பண்படைத்த வெனையறியா விளம்பருவந் தனிலே
பரிந்துவந்து மாலையிட்டான் பார்த்தறியான் மீட்டும்
பெண்படைத்த பெண்களெலா மவமதித்தே வலது
பேசுகின்றார் கூசுகின்றேன் பிச்சியென லானேன்
கண்படைத்துங் குழியில்விழக் கணக்குமுண்டோ வவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி. (க)

சித்தமணி யம்பலத்தா னென்பிராண நாதன்
சிவபெருமா னெம்பெருமான் செல்வநட ராஜன்
வாய்த்தவென்னை யறியாத விளம்பருவந் தனிலே
மகிழ்ந்துவந்து மாலையிட்டார் மறித்துமுகம் பாரா
ராய்த்தகலை கற்றுணர்ந்த வணங்கனையார் தமக்கு
ளார்செய்த போதனையோ வாறுலு மிதுகேள்
காய்த்தமரம் வளையாத கணக்குமுண்டோ வவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென்றோழி. (உ)

என்னுயிரிற் கலந்துகலந் திலிக்கின்ற பெருமான்
னென்னிறைவன் பொதுவினட மியற்றுநட ராஜன்
றன்னையறியாப் பருவத் தென்னைமணம் புரிந்தான்
றனையறிந்த பருவத்தே யெனையறிய விரும்பான்

பின்னையன்றி முன்னுமொரு பிழைபுரிந்தே னில்லை
பெண்பரிதா பங்காணல் பெருந்தகைக்கு மழகோ
கன்னலென்றுற் கைக்கின்ற கணக்குமுண்டோ வவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி. (ந)

தெருளமுதத் தனியோகர் சிந்தையிலு ஞானச்
செல்வரறி விடத்துநடஞ் செய்யுநடராஜ
னருளமுத மளிப்பனென்றே யன்றுமணம் புணர்ந்தா
னளித்தறியா னனுத்துணையு மனுபவித்து மறியேன்
மருளுடையா னல்லனொரு வஞ்சகனு மல்லன்
மனமிரக்க மிகவுடையான் வல்வினையே னளவி
லிருளுடையார் போலிருக்கு மியல்பென்னை யவன்றன்
னியல்பறிந்தும் விடுவேனோ வினித்தானென்றோழி.()

சின்மயமாம் பொதுவினிலே தன்மயமாய் நின்று
திருநடஞ்செய் பெருங்கருணைச் செல்வநடராஜ
னென்மயநா னறியாத விளம்பருவந் தனிலே
யென்னைமணம் புரிந்தனனி தெல்லாரு மறிவா
ரின்மயமில் லாதவர்போ லின்றுமணந் தருளா
னிறையளவும் பிழைபுரிந்தே னில்லையவ னிதயங்
கன்மயமோ வன்றுசுவைக் கனிமயமே யென்னுங்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி. (ரு)

எண்குணத்தா னெல்லார்க்கு மிறைவ னெல்லாம் வல்லா
னென்னகத்தும் புறத்துமுளா னின்பநட ராஜன்
பெண்குணத்தை யறியாத விளம்பருவந் தனிலே
பிச்சேற்றி மணம்புரிந்தான் பெரிதுகளித் திருந்தேன்
வண்குணத்தா லநுபவநா னறியநின்ற பொழுதில்
வந்தறியா னின்பமொன்றுந் தந்தறியானவனும்
வெண்குணத்தா னல்லன்மிகு நல்லனெனப் பலகால்
விழித்தறிந்தும் விடுவேனோ விளம்பாயென்றோழி(சு)

பொய்யாத புகழுடையான் பொதுவினடம் புரிவான்
புண்ணியர்பா னண்ணியநற் புனிதநட ராஜன்
கொய்யாத வரும்பனைய விளம்பருவந் தனிலே
குறித்துமணம் புரிந்தனனுன் மறித்தும்வரக் காணேன்
செய்யாத செய்கையொன்றுஞ் செய்தறியேன் சிறிதுந்
திருவுளமே யறியுமற்றென் னொருவுளத்தின் செயல்க
ணையாத வென்றனுயிர் நாதனருட் பெருமை
நானறிந்தும் விடுவேனோ நவிலாயென் றோழி. (7)

ஊன்மறந்த வுயிரகத்தே யொளிநிறைந்த வொருவ
னுலகமெலா முடையவனென் னுடையநட ராஜன்
பான்மறந்த சிறியவிளம் பருவமதின் மாலை
பரிந்தணிந்தான் றெரிந்ததனிப் பருவமிதிற் பரியான்
றான்மறந்தா னெனினுமிங்கு நான்மறக்க மாட்டேன்
றவத்தேறி யவத்திழியச் சம்மதமும் வருமோ
கோன்மறந்த குடியேபோன் மிடியேனு னவன்றன்
குணமறிந்தும் விடுவேனோ கூறாயென் றோழி. (8)

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது திருமுறை

முற்றிற்று.

---

னடிக்குந் தியாகர் திருமுன்போய்
நாராய் நின்று நவிற்றுயோ
பிடிக்கும் கிடையா நடையுடைய
பெண்க ளெல்லாம் பிச்சியென
நொடிக்கும் படிக்கு மிருங்காம
நோயால வருந்தி நோவதுவே. (3)

மாய மொழியார்க் கறிவரியார்
வண்கை யுடையார் மறைமணக்குந
தூய மொழியா ரொற்றியிற்போய்ச்
சுகங்கா ணின்று சொல்லீரோ
நேய மொழியாள் பந்தாடா
ளிலலாள வாச நீராடா
ளேய மொழியாள் பாலனமு
மேலா ளும்மை யெண்ணியென்றே. (4)

ஒல்லார் புரமூன் றெரிசெய்தா
ரொற்றி யமர்ந்தா ரெல்லார்க்கு
நல்லார் வல்லா ரவர்முன்போய்
நாராய் நின்று நவிற்றுதியே
யல்லார் குழலாள் கண்ணீரா
மாற்றி லலேந்தா ளணங்கனையார்
பல்லார் சூழ்ந்து பழிதூற்றப்
படுத்தாள் விடுத்தாள் பாயலென்றே. (5)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவொற்றியூர்

# இரங்கன்மாலை.

திருச்சிற்றம்பலம்.

அண்ட ரெவர்க்கு மறிவொண்ணு
ரணியா ரொற்றி யார்நீல
கண்ட ரவர்க்கு மாலையிட்ட
கடனே யன்றி மற்றவரால்
பண்ட மறியேன் பலனறியேன்
பரிவோ டணையப் பார்த்தறியேன்
கொண்டன் மணக்குங் கோதாயென்
குறையை யெவர்க்குக் கூறுவனே. (1)

ஆல மிருந்த களத்தழக
ரணிசே ரொற்றி யாலயத்தார்
சால வெனக்கு மாலையிட்ட
தன்மை யொன்றே யல்லாது
கால மிரம்ப வவர்புயத்தைக்
கட்டி யணைந்த தில்லையடி
கோல மதிவாண் முகத்தாயென்
குறையை யெவர்க்குக் கூறுவனே. (2)

நெய்தற் பணைசூ ழொற்றியினா
நிருத்தம் பயில்வார் மாலயனு
மெய்தற் கரியார் மாலையிட்டா
ரெனக்கென் றுரைக்கும் பெருமையல்லா
லுய்தற் கடியேன் மனையின்கண்
ணொருநா ளேனு முற்றறியார்
கொய்தற் கரிதாங் கொடியேயென்
குறையை யெவர்க்குக் கூறுவனே. (3)

திருச்சிற்றம்பலம்.

### திருவொற்றியூர்

## சல்லாப வியன்மொழி.

திருச்சிற்றம்பலம்.

காது நடந்த கண்மடவாளர்
கடிமா மனைக்குக் கால்வருந்தத்
தூது நடந்த பெரியவர்சிற்
சுகத்தா ரொற்றித் தொன்னகரார்
வாது நடந்தான் செய்கின்றீர்
மாது நடந்து வாவென்றார்
போது நடந்த தென்றேனப்
போது நடந்த தென்றாரே. (1)

வெற்றி யிருந்த மழுப்படையார்
விடையார் மேரு வில்லுடையார்
பெற்றி யிருந்த மனத்தர்குழுட்
பிறங்குந் தியாகப் பெருமானார்
சுற்றி யிருந்த பெண்களெலாஞ்
சொல்லி நகைக்க வருகணைந்தார்
சொற்றி யிருமென் றுரைத்தேனு
னொற்றி யிருந்தே னென்றாரே. (2)

விடையார் கொடிமே லுயர்த்தருளும்
வேத கீதப் பெருமானா
ருடையா ரொற்றி யூரமர்ந்தா
ருவந்தென் மனையி லின்றடைந்தா
ரிடையா வையமென் றார்நா
னிடைதா னையமென் றேனற்
கடையா ரளியா ரென்றார்கட்
கடையா ரளியா ரென்றேனே. (3)

திருச்சிற்றம்பலம்.

## திருவொற்றியூர்.

## இன்பக்கிளவி.

---

திருச்சிற்றம்பலம்.

தருவார் தருவார் செல்வமுதற்
றருவா ரொற்றித் தலமமர்வார்
மருவார் தமது மனமருவார்
மருவார் கொன்றை மலர்புனைவார்
திருவார் புயனு மலரோனுந்
தேடுந் தியாகப் பெருமானார்
வருவார் வருவா ரெனநின்று
வழிபார்த் திருந்தேன் வந்திலரே. (1)

பாரா திருந்தார் தமதுமுகம்
பார்த்து வருந்தும் பாவைதனைச்
சேரா திருந்தார் திருவொற்றித்
திகழுந் தியாகப் பெருமானார்
வாரா திருந்தா ரின்னுமிவள்
வருத்தங் கேட்டு மாலைதனைத்
தாரா திருந்தார் சலமகளைத்
தாழ்ந்த சடையிற் றரித்தாரே. (2)

சடையிற் றரித்தா ரொருத்திதனைத்
தழுவி மகிழ்மற் றொருபெண்ணை
புடையிற் றரித்தார் மகளேநீ
போனு லெங்கே தரிப்பாரோ

கடையிற் றரித்த விடமதனைக்
களத்திற் றரித்தார் கரித்தோலை
யிடையிற் றரித்தா ரொற்றியூ
ரிருந்தா ரிருந்தா ரென்னுளத்தே. (3)

திருச்சிற்றம்பலம்.

---

## இன்பப்புகழ்ச்சி.

திருச்சிற்றம்பலம்

மாடொன் றுடையா ருணவின்றி
மண்ணுண் டதுகாண் மலரோன்ற
னேடொன் றுடையா ரொற்றிவைத்தா
ரூரை மகிழ்வோ டுவந்தாலங்
காடொன் றுடையார் கண்டமட்டுங்
கறுத்தார் பூத கணத்தோடி
யீடொன் றுடையார் மகளேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (1)

பித்த ரெனும்பேர் பிறங்கநின்றார்
பேயோ டாடிப் பவுரிகொண்டார்
பத்தர் தமக்குப் பணிசெய்வார்
பணியே பணியாப் பரிவுற்றார்
சித்தர் திருவா மொற்றியினா
ரியாக ரென்றன் கலைகவர்ந்த
வெத்த ரன்றோ மகளேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (2)

ஆக்க மில்லார் வறுமையிலா
ரருவ மில்லா ருருவமிலார்
தூக்க மில்லார் சுகமில்லார்
துன்ப மில்லார் தோன்றுமல
வீக்க மில்லார் குடும்பமது
விருத்தி யாக வேண்டுமெனு
மேக்க மில்லார் மகனேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (3)

ஊரு மில்லா ரொற்றிவைந்தா
ருறவொன் றில்லார் பகையிலலார்
பேரு மில்லா ரெவ்விடத்தும்
பிறவா ரிறவார் பேச்சிலலார்
நேரு மில்லார் தாய்தந்தை
நேயர் தம்மோ டுடன்பிறந்தோர்
யாரு மில்லார் மகனேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (4)

துத்திப் படத்தார் சடைத்தலையார்
தோலையாப் பலித்தேர் தொன்மையினார்
முத்திக் குடையார் மண்ணெடுப்பார்
மொத்துண் டுழல்வார் மொய்கழற்காம
புத்திக் குரிய பத்தர்கடம
பொருளை யுடலை யாவையுமே
யெத்திப் பறிப்பார் மகனேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (5)

மாறித் திரிவார் மனமனையார்
வணங்கு மடியா ரனந்தோறும
வீறித் திரிவார் வெறுவெளியின்
மேவா நிற்பார் விறகுவிலை

கூறித் திரிவார் குதிரையின்மேற்
கொள்வார் பசுவிற் கோல்வளையோ
டேறித் திரிவார் மகளேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (6)

திருச்சிற்றம்பலம்.

---

திருவொற்றியூர்.

## திருவுலாத்திறம்.

திருச்சிற்றம்பலம்.

தேனார் கமலத் தடஞ்சூழுந்
திருவா ழொற்றித் தியாகரவர்
வானா ரமரர் முனிவர்தொழ
மண்ணோர் வணங்க வரும்பவனி
தானார் வங்கொண் டகமலரத்
தாழ்ந்து சூழ்ந்து கண்டலது
கானா ரலங்கற் பெண்ணேநான்
கண்க ளுறக்கங் கொள்ளேனே. (1)

திருமால் வணங்கு மொற்றிநகர்
செழிக்குஞ் செல்வத் தியாகரவர்
கருமா லகற்றுந் தொண்டர்குழாங்
கண்டு களிக்க வரும்பவனி
மருமாண் புடைய மனமகிழ்ந்து
மலர்க்கை கூப்பிக் கண்டலது
பெருமான் வடுக்கட் பெண்ணேநான்
பெற்றா ளோடும் பேசேனே. (2)

சேலார் தடஞ்சூ ழொற்றிநகர்
சேருஞ் செல்வத் தியாகரவ
ராலார் களமேல் விளங்குமுக
மழகு ததும்ப வரும்பவனி
நாலா ரணஞ்சூழ் வீதியிடை
நாடிப் புகுந்து கண்டலது
பாலார் குதலைப் பெண்ணேநான்
பாயிற் படுக்கை பொருந்தேனே. (3)

தென்னஞ் சோலை வளரொற்றி
யூர்வாழ் செல்வத் தியாகரவர்
பின்னுஞ் சடைமேற் பிறைவிளங்கப்
பிறங்கா நிற்க வரும்பவனி
மன்னுங் கரங்க டலைகுவித்து
வணங்கி வாழ்த்திக் கண்டலது
துன்னுந் துவர்வாய்ப் பெண்ணேநான்
சோறெள் ளளவு முண்ணேனே. (4)

திருச்சிற்றம்பலம்.

———

# திருவொற்றியூர்.

## வியப்புமொழி.

### நற்றாய் நயத்தல்

திருச்சிற்றம்பலம்.

மாதர் மணியே மகளேநீ வாய்த்த தவந்தான் யாதறியேன்
வேத ரனந்தர் மாலனந்தர் மேவி வணங்கக் காண்பரியார்
நாதர் நடன நாயகனார் நல்லோ ருளத்து நண்ணுகின்றோர்
கோத ரறியாத் தியாகர்தமைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே.

என்னா ருயிர்போன் மகளேநீ யென்ன தவந்தா னியற்றினையோ
பொன்னார் புயனு மலரோனும் போற்றி வணங்கும் பொற்பதத்தார்
தென்னா ரொற்றித் திருநகரார் தியாக ரெனுமோர் திருப்பெயரார்
கொன்னார் சூலப் படையவரைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே.

வில்லார் நுதலாய் மகளேநீ மேலை நாட்செய் தவமெதுவோ
கல்லா ருள்ளங் கலவாதார் காம னெரியக் கண்விழித்தார்
வில்லார் விசயற் கருள்புரிந்தார் விளங்கு மொற்றி மேவிநின்றார்
கொல்லா நெறியா ரவர்தம்மைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே

அஞ்சொற் கிளியே மகளேநீ அரிய தவமே தாற்றினையோ
வெஞ்சொற் புகலார் வஞ்சர்தமை மேவார் பூவார் கொன்றையினார்
கஞ்சற் கரியார் திருவொற்றிக் காவ லுடையா ரின்மொழியாற்
கொஞ்சத் தருவா ரவர்தம்மைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே

மயிலி னியல்சேர் மகளேநீ மகிழ்ந்து புரிந்த தெத்தவமோ
வெயிலி னியல்சேர் மேனியினார் வெண்ணீ றுடையார் வெள்விடையார்
பயிலின் மொழியாள் பாங்குடையார் பணைசூ ழொற்றிப் பதியமர்ந்தார்
குயிலிற் குலவி யவர்தம்மைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவொற்றியூர்.

## புணராவிரகு பொருந்துறு வேட்கையின் இரங்கல்.

திருச்சிற்றம்பலம்.

உள்ளார் புறத்தா ரொற்றியெனு
　　மூரா ரொப்பென் றொன்றுமிலார்
வள்ளா லென்று மறைதுதிக்க
　　வருவா ரின்னும் வந்திலரே
யெள்ளா திருந்த பெண்களெலா
　　மிகழா நின்றா ரினியமொழித்
தெள்ளா ரமுதே யென்னடிநான்
　　செய்வ தொன்றுந் தெரிந்திலனே (1)

பொய்ய ருளத்துட் புகுந்தறியார்
　　போத னெடுமால் காண்பரிதா
மையர் திருவா ழொற்றிநக
　　ரமர்ந்தா ரின்னு மணைந்திலரே
வைய மடவார் நகைக்கின்றா
　　ராரன் கணையாற் றிகைக்கின்றேன்
செய்ய முகத்தா யென்னடிநான்
　　செய்வ தொன்றுந் தெரிந்திலனே. (2)

வன்சொற் புகலா ரோருயிரும்
　　வருந்த நினையார் மனமகிழ
வின்சொற் புகலவா ரொற்றியுளா
　　ரென்னை யகனார் வந்திலரே
புன்சொற் செவிகள் புகத்துயரம்
　　பொறுத்து முடியேன் புலம்புகின்றேன்
றென்சொற் கிளியே யென்னடிநா
　　செய்வ தொன்றுந் தெரிந்திலனே. (3)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவொற்றியூர்.

## குறியாராய்ச்சி.

திருச்சிற்றம்பலம்.

ஆழி விடையா ரருளுடையா ரளவிட்டறியா வழகுடையா
ரூழி வரினு மழியாத வொற்றித் தலம்வா ழுத்தமனார்
வாழி யென்பால் வருவாரோ வறியேன் வருந்த வாராரோ
தோழி யனைய குறமடவாய் துணிந்தோர் குறிநீ சொல்லுவையே.
[பாம்
அணியா ரடியார்க் கயன்முதலா மமரர்க் கெல்லா மரியரென்
பணியா ரொற்றிப் பதியுடையார் பரிந்தென் முகந்தான் பார்ப்பாரோ
தணியாக் காதல் தவிர்ப்பாரோ சார்ந்து வரவு தாழ்ப்பாரோ
குணியா வெழில்சேர் குறமடவாய் குறிதானொன்று கூறுவையே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவொற்றியூர்.

## ஆற்றுக்காதலின் இரங்கல்.

திருச்சிற்றம்பலம்.

எங்கள காழிக் கவுணியரை
யெழிலார் சிவிகை யேற்றிவைத்தோர்
இங்க ளணியுஞ் செஞ்சடையார்
தியாகர் திருவா மொற்றியினா
ரங்க ளணிபூந் தார்ப்புயத்தி
லணைத்தா ரல்ல ரெனைமடவார்
தங்க ளலரோ தாமூறதென்
சகியே யினிநான் சகியேனே. (1)

ஆயும் படிவத் தந்தணனு
யாரு ரன்ற னணிமுடிமேற்
றோயுங் கமலத் திருவடிகள்
சூட்டு மதிகைத் தொன்னகரா
ரேயும் பெருமை யொற்றியுளா
ரின்னு மணையா ரெனையளித்த
தாயுந் தமரு நொடிக்கின்றார்
சகியே யினிநான் சகியேனே. (2)

திருச்சிற்றம்பலம்.

---

திருவொற்றியூர்.

திருக்கோலச் சிறப்பு.

தலைவி வியத்தல்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னென் றொளிரும் புரிசடையார்
புனை நூ லுடையார் புடையுடையார்
மன்னென் றுலகம் புகழொற்றி
வாணர் பவனி வரக்கண்டேன்
மின்னென் றிலங்கு மாதரெலாம்
வேட்கை யடைய விளங்கினின்ற
தின்னென் றறியே னவரழகை
யென்னென் றுரைப்ப தேந்திழையே. (1)

அள்ளிக் கொடுக்குங் கருணையினு
ரணிசே ரொற்றி யாலயத்தார்
வள்ளிக் குவந்தோன் றனையீன்ற
வள்ளல் பவனி வரக்கண்டேன்

றுள்ளிக் குதித்தென் மனமவரைச்
சூழ்ந்த தின்னும் வந்ததிலை
யெள்ளிக் கணியா வவரழகை
யென்னென் றுரைப்ப தேந்திழையே. (2)

கொழுதி யளிதே னுழுதுண்ணுங்
கொன்றைச் சடையார் கூடலுடை
வழுதிமருகர் திருவொற்றி
வாணர் பவனி வரக்கண்டேன்
பழுதி லவனுந் திருமாலும்
படைக்குங் கமலப் பண்ணவனு
மெழுதி முடியா வவரழகை
யென்னென் றுரைப்ப தேந்திழையே. (3)

மாழை மணித்தோ ளெட்டுடையார்
மழுமா னேந்து மலர்க்கரத்தார்
வாழை வளஞ்சூ ழொற்றியூர்
வாணர் பவனி வரக்கண்டேன்
யாழை மலைக்கு மொழிமடவார்
யாருமயங்கிக் கலையவிழ்ந்தார்
யேழை யேனு னவரழகை
யென்னென் றுரைப்ப தேந்திழையே. (4)

திருச்சிற்றம்பலம்.

---

## சோதிடநாடல்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னஞ் சிலையாற் புரமெரித்தார்
பொழில்சூ ழொற்றிப் புண்ணியனார்
முன்னஞ் சருந்து முக்கணனார்
மூவ ரறியா முதல்வர்வர
வின்னஞ் சிலநாள் சென்றிடுமோ
விலதே யின்று வருவாரோ
வென்னஞ் சிறந்தீர் சோதிடம்பார்த்
துரைப்பீர் புரிநூ லுத்தமரே. (1)

பைத்த வரவப் பணியணிவார்
பனைசூ ழொற்றிப் பதிமகிழ்வார்
மைத்த மிடற்று ரவர்தமக்கு
மாலை யிடவே நாளுளத்தில்
வைத்த கருத்து முடிந்திடுமோ
வறிதே முடியா தழிந்திடுமோ
வுய்த்த மதியாற் சோதிடம்பார்த்
துரைப்பீர் புரிநூ லுத்தமரே. (2)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவருட்பெருமிதம்.

திருச்சிற்றம்பலம்.

கருவாழ் வகற்றுங் கண்ணுதலார்
கண்ணனயனுங் காண்பரியார்
திருவா ழொற்றித் தேவரெனுஞ்
செல்வ ரவரே செல்வமதிற்

பெருவாழ் வுடையா ரெனநினைத்தாய்
பிச்சை யெடுத்த தறிந்திலையோ
விருவா மயல்கொண் டெதுபெறுவா
யேழை யடிநீ யென்மகளே. (1)

மட்டுக் கடங்கா வண்கையினர்
வளஞ்சே ரொற்றி வாணரவர்
பட்டுத் துகிலே திசைகளெலாம்
படர்ந்த தென்னப் பரிந்தனையோ
கட்டத் துகிலுங் கிடையாது
கந்தை யுடுத்த தறிந்திலையோ
விட்டுப் புணர்ந்திங் கெதுபெறுவா
யேழை யடிநீ யென்மகளே. (2)

நீடி வளங்கொள் ளொற்றியில்வாழ்
நிமல ருலகத் துயிர்தோறு
மோடி யொளிப்பா ரவர்நீயு
மொக்க வோட வுன்வசமோ
காடி கடிப்பார் நீயுமுட
னடித்தா லுலகர் நகையாரோ
வீடின் மயல்கொண் டெதுபெறுவா
யேழை யடிநீ யென்மகளே. (3)

உள்ளி யுருகு மவர்க்கருளு
மொற்றி நகர்வா ழுத்தமர்க்கு
வெள்ளி மலையும் பொன்மலையும்
வீடென் றுரைப்பா ராவைலும்

கள்ளி நெருங்கிப் புறங்கொள்சுடு
காடே யிடங்காண் கண்டறிநீ
யெள்ளின் மயல்கொண் டெதுபெறுவா
யேழை யடிநீ யென்மகளே. (4)

திருச்சிற்றம்பலம்.

---

## காதற்சிறப்புக் கதுவா மாண்பு.

திருச்சிற்றம்பலம்.

உலக முடையார் தம்மூரை யொற்றிவைத்தா ரென்றாலு
மலகில் புகழார் காபாலி யாகத் திரிந்தா ரென்றாலும்
திலக மனையார் புறங்காட்டிற் சேர்ந்து நடித்தா ரென்றாலும்
கலக விழியாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே.

என்னை யுடையா ரொருவேட னெச்சி லுவந்தா ரென்றாலு
மன்னை யனையா ரொருமகனை யறுக்க வுரைத்தா ரென்றாலும்
துன்னு மிறையார் தொண்டனுக்குத் தூத ராணு ரென்றாலும்
கன்னியிதுகே ளானவர்மேற்காதலொழியேன் கனவினுமே.

என்கண் ணனையார் மலைமகளை யிச்சித் தணைந்தா ராணாலும்
வன்கண் ணடையார் திக்கண்ணுன் மதனை யெரித்தா ராணாலும்
புன்கண் ணறுப்பார் புன்னகையாற் புரத்தை யழித்தா ராணாலும்
கன்னன் மொழியாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே.

திருச்சிற்றம்பலம்.

---

## காதன்மாட்சி.

திருச்சிற்றம்பலம்.

தக்க வளஞ்சே ரொற்றியில்வாழ்
தம்பி ராஞர் பவனிதனை
துக்க மகன்று காண வந்தாற்
றுகிலைக் கவர்ந்து துணிவுகொண்டே

பக்க மருவு நமைத்திரும்பிப்
பாரா தோடு கின்றார்நா
மொக்க வோடி னாலுமவ
ரோட்டம் பிடிக்க வொண்ணாதே. (1)

தாயா யளிக்குந் திருவொற்றித்
தலத்தார் தமது பவனிதனை
மாயா நலத்திற் காணவந்தான்
மருவு நமது மனங்கவர்ந்து
பாயா விரைவி னமைத்திரும்பிப்
பாரா தோடு கின்றார்நா
மோயா தோடி னாலுமவ
ரோட்டம் பிடிக்க வொண்ணாதே. (2)

அழியா வளத்தார் திருவொற்றி
யையர் பவனி [illegible]க்காண
விழியா மகிழ்வி னெதிர்வந்தா
ளென்னை பெண்மை யெழில்கவர்ந்து
பழியா வெழிலி னமைத்திரும்பிப்
பாரா தோடு கின்றார்நா
மொழியா தோடி னாலுமவ
ரோட்டம் பிடிக்க வொண்ணாதே. (3)

திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது திருமுறை முற்றிற்று.



# நான்காவது திருமுறை

## அன்புமாலை

திருச்சிற்றம்பலம்.

அற்புதப்பொன் னம்பலத்தே யாடுகின்ற வரசே
யாரமுதே யடியேன்ற னன்பேயென் னறிவே
கற்புதவு பெருங்கருணைக் கடலேயென் கண்ணே
கண்ணுதலே யானந்தக் களிப்பேமெய்க் கதியே
வெற்புதவு பசுங்கொடியை மருவுபெருந் தருவே
வேதவா கமமுடியின் விளங்குமொளி விளக்கே
பொற்புறவே யிவ்வுலகிற் பொருந்துசித்த ஞனேன்
பொருத்தமுநின் றிருவருளின் பொருத்தமது தானே. (1)

துப்பாடு திருமேனிச் சோதிமணிச் சுடரே
துரியவெளிக் குள்ளிருந்த சுத்தசிவ வெளியே
யப்பாடு சடைமுடியெம் மானந்த மலையே
யருட்கடலே குருவேயென் ஞண்டவனே யரசே
யிப்பாடு படவெனக்கு முடியாது துரையே
யிரங்கியருள் செயல்வேண்டு மிதுதருணங் கண்டாய்
தப்பாடு வேனெனினு மென்னைவிடத் துணியேற்
றனிமன்று ணடம்புரியுந் தாண்மலரெந் தாயே. (2)

குன்றாத குணக்குன்றே கோவாத மணியே
குருவேயென் குடிமுழுதாட் கொண்டசிவக் கொழுந்தே
யென்றாதை யாகியெனக் கன்னையுமாய் நின்றே
யெழுமையுமென் றனையாண்ட வென்னுயிரின் றுணையே
பொன்றாத பொருளேமெய்ப் புண்ணியத்தின் பயனே
பொய்யடியேன் பிழைகளெலாம் பொறுத்தபெருந் தகையே
யன்றால நிழலமலர்ந்த வருளிறையே யெளியே
ஞசையெலா நின்னடிமே லன்றியொன்று மிலேயே. (3)

பால்காட்டு மொளிவண்ணப் படிகமணி மலையே
பத்திக்கு நிலைதனிலே தித்திக்கும் பழமே
சேல்காட்டும் விழிக்கடையாற் றிருவருளைக் காட்டுஞ்
சிவகாம வல்லிமகிழ் திருநடநா யகனே
மால்காட்டி மறையாதென் மதிக்குமதி யாகி
வழிகாட்டி வழங்குகின்ற வகையதனைக் காட்டிக்
கால்காட்டிக் காலாலே காண்பதுவு மெனக்கே
காட்டியநின் கருணைக்குக் கைம்மாறொன் றிலனே (4)

பாடும்வகை யணுத்துணையும் பரிந்தறியாச் சிறிய
பருவத்தே யணிந்தணிந்து பாடும்வகை புரிந்து
நாடும்வகை யுடையோர்க ணன்குமதித் திடவே
நல்லறிவு சிறிதளித்துப் புல்லறிவு போக்கி
நீடும்வகை சன்மார்க்க சுத்தசிவ நெறியி
னிறுத்தினையிச் சிறியேனை நின்னருளென் னென்பேன்
கூடும்வகை யுடையரெலாங் குறிப்பெதிர்பார்க் கின்றார்
குற்றமெலாங் குணமாகக் கொண்டகுணக் குன்றே. (5)

செவ்வண்ணத் திருமேனி கொண்டொருபாற் பசந்து
திகழ்படிக வண்ணமொடு தித்திக்குங் கனியே
யிவ்வண்ண மெனமறைக்கு மெட்டாமெய்ப் பொருளே
யென்னுயிரே யென்னுயிர்க்கு ளிருந்தருளும் பதியே
யவ்வண்ணப் பெருந்தகையே யம்பலத்தே நடஞ்செய்
யாரமுதே யடியேனிங் ககமகிழ்ந்து புரித
லெவ்வண்ண மதுவண்ண மிசைத்தருளல் வேண்டு
மென்னுடைய நாயகனே யிதுதருணங் காணே. (6)

திருச்சிற்றம்பலம்.

---

## அருட்பிரகாச மாலை

திருச்சிற்றம்பலம்.

மறைமுடிக்கு மணியாகி வயங்கியசே வடிகண்
மண்மீது படநடந்து வந்தருளி யடியேன்
குறைமுடிக்கும் படிக்கதவந் திறப்பித்து நின்று
கூவியெனை யழைத்தொன்று கொடுத்தருளிச் செய்தாய்
கறைமுடிக்கும் களத்தரசே கருணைநெடுங் கடலே
கண்ணோங்கு மொளியேசிற் கநவெளிக்குள் வெளியே
பிறைமுடிக்குஞ் சடைக்கடவுட் பெருந்தருவே குருவே
பெரியமன்று ணடம்புரியும் பெரியபரம் பொருளே. (1)

பலகோடி மறைகளெலா மூலகோடி மயங்கப்
பரநாத முடிநடிக்கும் பாதமலர் வருந்தச்
சிலகோடி நடந்தெளியே னிருக்குமிடத் தணைந்து
தெருக்கதவந் திறப்பித்தென் செங்கையிலொன் றளித்தே
யலகோடி வருந்தேலிங் கமர்கவெனத் திருவா
யலர்ந்தவருட் குருவேபொன் னம்பலத்தெம் மரசே
விலகோடி யெனத்துயர்க ளொன்றொடொன்று புகன்று
விரைந்தோடச் செய்தனையிவ் வினைவறியேன் வியப்பே.

வேதாந்த சித்தாந்த மென்னுமந்த மிரண்டும்
விளங்கவமர்ந் தருளியநின் மெல்லடிகள் வருந்த
நாதாந்த வெளிதனிலே நடந்தருளு மதுபோ
னடந்தருளிக் கடைநாயே னண்ணுமிடத் தடைந்து
போதாந்த மிசைவிளங்குந் திருமேனி காட்டிப்
புலையேன்கை யிடத்தொன்று பொருந்தவைத்தபொருளே
சூதாந்த மனத்தினுக்கு மப்பாற்பட் டிருந்த
துரியவிளக் கேவிளங்கும் பெரியவருட் குருவே. (3)

கற்பனைக ளெல்லாம்போய்க் கரைந்த தலந்தனிலே
கரையாது நிறைந்ததிருக் கழலடிகள் வருந்த
வெற்பனையு மின்றியொரு தனியாக நடந்து
விரைந்திரவிற் கதவுதனைக் காப்பவிழ்க்கப் புரிந்திவ்
வற்பனையோர் பொருளாக வழைத்தருளி யடியே
னங்கையிலொன் றளித்தனைநின் னருளினையென் புகல்வே
னற்பனவர் துதிக்கமணி மன்றகத்தே யின்ப
நடம்புரியும் பெருங்கருணை நாயகமா மணியே. (4)

காணுகின்ற கண்களுக்குக் காட்டுகின்ற வொளியாய்க்
காட்டுகின்ற வொளிதனக்குக் காட்டுவிக்கு மொளியாய்ப்
பூணுகின்ற திருவடிகள் வருந்தநடந் தடியேன்
பொருந்துமிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து
கோணுகின்ற மனத்தாலே நாணுவதேன் மகனே [க்கு
குறைவறவாழ்கெனமகிழ்ந்து கொடுத்தனையொன்றெனை
மாணுகின்ற நின்னருளின் பெருமையையென் னென்பேன்
மணிமன்றி லானந்த மாநடஞ்செய் யரசே. (5)

எவ்வுலகு மெவ்வுயிரு மெச்செயலுந் தோன்றி
யியங்குமிட மாகியெல்லா முயங்குமிட மாகித்
தெவ்வுலகு நண்புலகுஞ் சமனாகக் கண்ட
சித்தர்கடஞ் சித்தத்தே தித்திக்கும் பதங்க
ளிவ்வுலகில் வருந்தநடந் தென்பொருட்டா லிரவி
லெழிற்கதவந் திறப்பித்தங்கென்கையிலொன் றளித்தா
யவ்வுலக முதலுலக மனைத்துமகிழ்ந் தேத்த
வம்பலத்தே நடம்புரியுஞ் செம்பவளக் குன்றே. (6)

பாடுகின்ற மறைகளெலா மொருபுறஞ்சூழ்ந் தாடப்
பத்தரொடு முத்தரெலாம் பார்த்தாடப் பொதுவி
லாடுகின்ற திருவடிகள் வருந்தநடந் தடியே
னடையுமிடத் தடைந்திரவிற் காப்பவிழ்க்கப் புரிந்து

நாடுகின்ற சிறியேனை யழைத்தருளி நோக்கி
நகைமுகஞ்செய் தென்கரத்தே நல்கினையொன் றிதனால்
வாடுகின்ற வாட்டமெலாந் தவிர்ந்துமகிழ் கின்றேன்
மன்னவநின் பொன்னருளை யென்னெனவாழ்த் துவனே.
எம்மதத்தி லெவரெவர்க்கு மரியைந்தவனு பவமா
யெல்லாமா யல்லவுமா யிருந்தபடி யிருந்தே
யம்மதப்பொன் னம்பலத்தி லானந்த நடஞ்செய்
யரும்பெருஞ்சே வடியிணைக ளசைந்துமிக வருந்த
விம்மதத்தி லென்பொருட்டா யிரவினடந் தருளி
யெழிற்கதவந் திறப்பித்தங் கெனையழைத்தென் கரத்தே
சம்மதத்தா லொன்றளித்த தயவினையென் புகல்வேன்
றம்மையறிந் தவரறிவின் முன்னுமொளி மணியே. (8)
உலகியலோ டருளியலு மொருசிறிய சிறியே [கித்
னுணர்விலிருந் துணர்த்தியென துயிர்க்குயிராய் விளங்
திலகமெனத் திகழ்ந்தெனது சென்னிமிசை யமர்ந்த
திருவடிகள் வருந்தநடை செய்தருளி யடியே
னிலகுமனைக் கதவிரவிற் றிறப்பித்தங் கென்னை [காலம்
யினிதழைத்தொன் றளித்துமகிழ்ந் தின்னுநெடுங்
புலவர்தொழ வாழ்கவென்றாய பொதுவினடம் புரியும்[னே.
பொருளேநின் னருளைமெய்ப் பொருளெனத்தேர்ந்த

---

பிரசாதமாலை.
திருச்சிற்றம்பலம்.

பிழையலதொன் றறியாத சிறியேன்முன் புரிந்த
பெருந்தவமோ திருவருளின் பெருமையிதோ வறியேன்
மழையெனநின் றிலகுதிரு மணிமிடற்றிற் படிக
வடந்திகழ நடந்துகுரு வடிவதுகொண் டடைந்து
விழைவினொடென் னெதிர்நின்று திருநீற்றுக் கோயில்[தாய்
விரித்தருளி யருண்மணப்பூ விளக்கமொன்று கொடுத்

குழையசையச் சடையசையக்குலவுபொன்னம்பலத்தே [தே.
கூத்தியற்றியென்னை முன்னாட் கொண்டசிவக் கொழுந்
உன்னுதற்கு முணர்வதற்கு முவட்டாத வடிவ
மொன்றெடுத்து மெய்யன்ப ருவக்கவெழுந் தருளி
முன்னுதற்கோ ரணுத்துணையுந் தாமில்லாச் சிறியேன்
முகநோக்கிச் செழுமணப்பூ முகமலர்ந்து கொடுத்தாய்
துன்னுதற்கிங் கரிதாநின் றிருவுள்ளக் குறிப்பைத் [றேன்
துணிந்தறியே னென்னினுமோர் துணிவினுவக் கின்
பொன்னுதற்குத் திலகமெனுஞ் சிவகாம வல்லிப் [ளே.
பூவையொரு புறங்களிப்பப் பொதுநடஞ்செய் பொரு

---

ஆனந்தமாலை.

திருச்சிற்றம்பலம்.

சண்பை மறைக் கொழிந்துமகிழ் தரவமுதங் கொடுத்தாள்
தயவுடையா ளெனையுடையாள் சர்வசத்தி யுடையாள்
செண்பகப்பொன் மேனியினாள் செய்யமலர்ப் பதத்தாள்
சிவகாம வல்லிபெருந் தேவியுளங் களிப்பப்
பண்பகர்பொன் னம்பலத்தே யானந்த நடஞ்செய்
பரம்பரநின் றிருவருளைப் பாடுகின்றேன் மகிழ்ந்து
வெண்பகர்குற் றங்களெல்லாங் குணமாகக் கொள்ளு
மெந்துரையென் றெண்ணுகின்ற வெண்ணமத னாலே.
பொய்யாத வரமெனக்குப் புரிந்தபரம் பரைவான்
பூதமுதற் கருவியெலாம் பூட்டுவிக்குந் திறத்தாள்
செய்யாளும் கலையவளு முருத்திரையும் வணங்குஞ்
சிவகாம வல்லிபெருந் தேவியுளங் களிப்பக்
கையாத வின்பநடங் கனகமணிப் பொதுவிற்
களித்தியற்றுந் துரையேநின் கருணையைநான் கருதி
நையாத வண்ணமெலாம் பாடுகின்றேன் பருவ
நண்ணியபுண் ணியரெல்லா நயந்துமகிழ்ந் திடவே. (2)

பூரணிசிற் போதைசிவ போகிசிவ யோகி
பூவையர்க ளுயகியைம் பூதமுந்தா னுனள்
தோரணியு நெடுவீதித் தில்லைநக ருடையாள்
சிவகாம வல்லிபெருந் தேவியுளங் களிப்ப
வேரணியு மணிமன்றி லின்பவடி வாகி
யின்பநடம் புரிகின்ற வெம்முடைய துரையே
தாரணியி லுனைப்பாடுந் தரத்தையடைந் தனனென்
றன்மையெலா நன்மையெனச் சம்மதித்த வாறே. (3)

திருச்சிற்றம்பலம்.

---

## சௌந்தரமாலை.

திருச்சிற்றம்பலம்.

சேலோடு மினைந்தவிழிச் செல்வி பெருந்தேவி
சிவகாம வல்லியொடு சிவபோக வடிவாய்
மேலோடு கீழ்நடுவுங் கடந்தோங்கு வெளியில் [லாம்
விளங்கியநின் றிருவுருவை யுளங்கொளும்போ தெல்
பாலோடு பழம்பிழிந்து தேன்கலந்து பாகும்
பசுநெய்யுங் கூட்டியுண்ட படியிருப்ப தென்றன்
மாலோடு காண்கின்ற கண்களுக்கங் கிருந்த
வண்ணமிந்த வண்ணமென வெண்ணவொண் ணாதே.

சித்தியெலா மளித்தசிவ சத்தியெனை யுடையாள்
சிவகாம வல்லியொடு சிவஞானப் பொதுவின்
முத்தியெலாந் தரவிளங்கு முன்னவநின் வடிவை
மூடமனச் சிறியேனு னுடவரும் பொழுது
புத்தியெலா மொன்றாகிப் புத்தமுத முண்டாற்
போலுமிருப் பதுவதற்கு மேலுமிருப் பதுவேற்
பத்தியெலா முடையவர்கள் காணுமிடத் திருக்கும்
படிதானெப் படியோவிப் படியென்ப தரிதே. (2)

கரும்பனையா ளென்னிரண்டு கண்களிலே யிருந்தாள்
கற்பகப்பொன் வல்லிசிவ காமவல்லி யுடனே
விரும்புமணிப் பொதுவினிலே விளங்கியநின் வடிவை
வினையுடையே னினைக்கின்ற வேளையிலென் புகல்வே
னிரும்பனைய மனநெகிழ்ந்து நெகிழ்ந்துருகி யொருபே
ரின்பமய மாகுமெனி லன்பர்கண்ட கால
மரும்பிமலர்ந் திட்டசிவா நந்தவனு பவத்தை
யாரறிவார் நீயறிவா யம்பலத்தெம் மரசே. (3)

திருச்சிற்றம்பலம்.

## அபராத மன்னிப்பு மாலை.

திருச்சிற்றம்பலம்.

செய்வகைநன் கறியாதே திருவருளோ டேடிச்
சிலபுகன்றே னறிவறியாச் சிறியரினுஞ் சிறியேன்
பொய்வகையேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்
புண்ணியனே மதியணிந்த புரிசடையாய் விடையாய்
மெய்வகையோர் விழித்திருப்ப விரும்பியெனை யன்றே
மிகவலிந்தாட் கொண்டருளி வினைதவிர்த்த விமலா
வைவகைய கடவுளரு மந்தணரும் பரவ
வானந்தத் திருநடஞ்செய் யம்பலத்தெம் மரசே. (1)

தேர்ந்துணர்ந்து தெளியாதே திருவருளோ டேடிச்
சிலபுகன்றேன் றிருக்கருணைத் திறஞ்சிறிதுந் தெரியேன்
போந்தகனேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்
போதாந்த மிசைவிளங்கு நாதாந்த விளக்கே
யூர்ந்தபணக் கங்கணமே முதற்பணிக ளொளிர
வுயர்பொதுவி னடிக்கின்ற செயலுடைய பெருமான்
சார்ந்தவரை யெவ்வகையுந் தாங்கியளிக் கின்ற
தயவுடைய பெருந்தலைமைத் தனிமுதலெந் தாயே. (2)

ஒல்லும்வகை யறியாதே யுன்னருளோ டூடி
 யூறுபுகன் றேன்றயரா மாறும்வகை யுணரேன்
புல்லியனேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்
 பூதியணிந் தொளிர்கின்ற பொன்மேனிப் பெருமான்
சொல்லியலும் பொருளியலுங் கடந்தபரா நாதத்
 துரியவெளிப் பொருளான பெரியசிவப் பதியே
மெல்லியனற் சிவகாம வல்லிகண்டு மகிழ
 விரியுமறை யேத்தநடம் புரியுமரு ளிறையே. (3)

ஆளுடையபிள்ளையா ரருண்மாலை.

திருச்சிற்றம்பலம்.

*உலகிய லுணர்வோ ரணுத்துணை யேனு
 முற்றிலாச் சிறியவோர் பருவத்
திலகிய வெனக்குள் ளிருந்தரு ணெறியி
 லேற்றவுந் தரமிலா மையினுன்
விலகுறுங் காலத் தடிக்கடி யேற
 விடுத்துப்பின் விலகுறு தளித்தாய்
அலகிலா வுணர்ச்சி யளித்தனை யுன்ற
 னருட்கடற் பெருமை யென்புகல்வேன்
திலகநற் காழி ஞான சம்பந்தத்
 தெள்ளமு தாஞ்சிவ குருவே. (1)

---

* சுவாமிகள் தமது திருக்கரத்தாலெழுதிய மூலப்பிரதியில் இச் செய்யுள்ஐந்தடியாகவே இருத்தலினால் அங்ஙனமே பதிப்பித்ததாகப் பழைய பதிப்பாசிரியர்கள் கூறுகின்றன ராதலின், ஈண்டும் அங் ஙனமே கொள்ளப்பட்டது.

சீரார் சண்பைக் கவுணியர்தந் தெய்வமரபிற் றிகழ்விளக்கே
தெவிட்டா துளத்திற் றித்திக்குந் தேனேயழியாச் செல்வமே
காரார்மிடற்றுப் பவளமலைக் கண்ணின்முளைத்த கற்பகமே [யே
கரும்பே கனியே யென்னிரண்டு கண்ணே கண்ணிற் கருமணி
யேயோர்பருவ மூன்றி லுமை யினிய முலைப்பா லெடுத்தூட்டு [யே
மின்பக்குதலை மொழிக்குருந்தே யென்னு ருயிருக் கொருதுணை
பேரார்ஞான சம்பந்தப் பெருமானேநின் றிருப்புகழைப் [சே.
பேசுகின்றோர் மேன்மேலும் பெருஞ்செல்வத்திற் பிறங்குவ

திருச்சிற்றம்பலம்.

## ஆளுடையவரசு அரண்மாலை.

திருச்சிற்றம்பலம்.

திருத்தகுசீ ரதிகையருட் டலத்தி னோங்குஞ்
சிவக்கொழுந்தி னருட்பெருமைத் திறத்தால் வாய்மை
யுருத்தகுமெய் யுணர்ச்சிவடி வாகிச் சைவ
வொளிவிளங்க நாவரசென் றொருபேர் பெற்றுப்
பொருத்தமுற வுழவாரப் படைகைக்கொண்ட
புண்ணியனே நண்ணியசீர்ப்புனித னேயென்
கருத்தமர்ந்த கலைமதியே கருணை ஞானக்
கடலேநின் கழல்கருதக் கருது வாயே. (1)

கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக்
கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்
பண்ணுளே விளைந்தவருட் பயனே யுண்மைப்
பதியோங்கு நிதியேநின் பாத மன்றி
விண்ணுளே யடைகின்ற போக மென்றும்
விரும்பேனென் றனையாள வேண்டுங் கண்டா
யொண்ணுளே யொன்பதுவாய் வைத்தா யென்ற
வுத்தமனே சித்தமகிழ்ந் துதவு வோனே. (2)

அருள்வழங்குந் திலதவதி யம்மை யார்பின்
னவதரித்த மணியேசொல் லரசே ஞானத்
தெருள்வழங்குஞ் சிவநெறியை விளக்க வந்த
செழுஞ்சுடர்மா மணிவிளக்கே சிறிய னேனை

யிருள்வழங்கு முலகியனின் றெடுத்து ஞான
வின்னருடந் தாண்டருள்வா யின்றே லந்தோ
மருள்வழங்கும் பவநெறியிற் சுழல்வே னுய்யும்
வகையறியே னின்னருட்கு மரபன் றீதே. (3)
திருச்சிற்றம்பலம்.

ஆளுடைய நம்பிக ளருண்மாலை.

கொச்சகக் கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமா யென்றுமுன்னீ சொன்னபெருஞ் சொற்பொருளை
யாழிநினைத் திடிலடியே னரும்கரணங் கரைந்துகரைந்
தாழியின் புறுவதுகா ணுயர்கருணைப் பெருந்தகையே.()

வான்காண விந்திரனு மாலயனு மாதவருந்
தான்காண விறையருளாற் றனித்தவள யானையின்மேற்
கோன்காண வெழுந்தருளிக் குலவியநின் கோலமதை
நான்காணப் பெற்றிலனே நாவலூர்ப் பெருந்தகையே. (2)

தேன்படிக்கு மமுதாமுன திருப்பாட்டைத் தினந்தோறு
நான்படிக்கும் போதென்னை நானறியே னுவொன்றே
யூன்படிக்கு முளம்படிக்கு முயிர்படிக்கு முயிர்க்குயிருந்
தான்படிக்கு மனுபவங்காண் டனிக்கருணைப் பெருந்தகையே.

இன்பாட்டுத் தொழிற்பொது வியற்றுகின்ற வெம்பெருமா
னுன்பாட்டுக் குவப்புறல்போ லூர்பாட்டுக் குவந்திலனென்
றென்பாட்டுக் கிசைப்பினுமென் னிடும்பாட்டுக் காணமெலா
மன்பாட்டுக் கிசைவதுகா ணருட்பாட்டுப் பெருந்தகையே.()

பேரூரும் பரவைமனப் பிணக்கறவெம் பெருமானை
யூரூரும் பலபுகல வோரிரவிற் றூதனெனத்
தேரூரும் திருவாரூர்த் தெருவுதொறு நடப்பித்தா
யாரூர நின்பெருமை யயன்மாலு மளப்பரிதே. (5)
திருச்சிற்றம்பலம்.

## ஆளுடையவடிக ளருண்மாலை

*தரவு கொச்சகக் கலிப்பா*

திருச்சிற்றம்பலம்.

தேசகத்தி லினிக்கின்ற தெள்ளமுதே மாணிக்க
வாசகனே யாநந்த வடிவான மாதவனே
மாசகன்ற நீதிருவாய் மலர்ந்த தமிழ் மாமறையி
னாசகன்ற வனுபவநா னனுபவிக்க வருளுதியே. (1)

சேமமிகுந் திருவாத வூர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியே நீயுரைத்த வாசகத்தை யெண்ணுதொறும்
காமமிகு காதலன்றன் கலவிதனைக் கருதுகின்ற
வேமமுறு கற்புடையா ளின்பினுமின் பெய்துவதே. (2)

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கா னற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பாலகலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
னூன்கலந்து வுயிர்கலந்து வுவட்டாம லினிப்பதுவே. (3)

வருமொழிசெய் மாணிக்க வாசகநின் வாசகத்தி [துத்
லொருமொழியே யென்னையுமென் னுடையனையு மொன்றுவித்
தருமொழியா மென்னிலினிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பியயல கூடுவதேன் கூறுதியே. (4)

பெண்சுமந்த பாகப் பெருமா னொருமாமே
லெண்சுமந்த சேவகன்போ லெய்தியதும் வைகைநதி
மண்சுமந்து நின்றதுமோர் மாறன் பிரம்படியாற்
புண்சுமந்து கொண்டதுநின் பொருட்டன்றோ புண்ணியனே

வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளு மெய்ஞ்ஞான
நாட்டமுறு மென்னிலிங்கு நானடைதல் வியப்பன்றே. (6)

திருச்சிற்றம்பலம்.

நான்காவது திருமுறை முற்றிற்று.

---

# ஐந்தாவது திருமுறை.

---o---

## சித்திவிநாயகர் பதிகம்.

---

திருச்சிற்றம்பலம்.

உலகெலாந் தழைப்ப வருண்மத வருவி
ஒழுகுமா முகமுமைங் கரமு
மிலகுசெம் மேனிக் காட்சியு மிரண்டோ
டிரண்டென வோங்குதிண் டோளும்
திலகவா ணுதலார் சித்திபுத் திகளைச்
சேர்த்தணைத் திடுமிரு மருங்கும்
விலகுறு தெளியேன் விழைந்தனன் சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. (1)

உள்ளமு முயிரு முணர்ச்சியு முடம்பு
முறுபொருள் யாவுநின் றனக்கே
கள்ளமுங் கரிசு நினைந்திடா துதவிக்
கழலிணை நினைந்துநின் கருணை
வெள்ளமுண் டிரவு பகலறி யாத
வீட்டினி லிருந்துநின் னோடும்
வின்ளலில் லாமற் கலப்பனே சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. (2)

நாதமுங் கடந்து நிறைந்து நின்மயமே
நானென வறிந்துநான் றானும்
பேதமுங் கடந்த மௌனராச் சியத்தைப்
பேதையேன் பிடிப்பதெந் நாளோ

வேதமுஞ் சமய வாதமும் விடுத்தோ
ரிதயமு மேழையேன் சிரமும்
வேதமுந் தாங்கும் பாதனே சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. (3)

ஒன்றல விரண்டு மலவிரண் டொன்றோ
டுருவல வருவல வுவட்ட
நன்றல நன்றல் லாதல விந்து
நாதமு மலவிவை யனைத்தும்
பொன்றலொன் றறிந்துட் புறத்தினு மகண்ட
பூரண மாஞ்சிவ மொன்றே
வென்றலென் றறிநீ யென்றனை சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. (4)

பெரும்பொருட் கிடனும் பிரணவ வடிவிற்
பிறங்கிய வொருதனிப் பேறே
யரும்பொரு ளாகி மறைமுடிக் கண்ணே
யமர்ந்தபே ரானந்த நிறைவே
தரும்பர போக சித்தியுஞ் சுத்த
தருமமு முத்தியுஞ் சார்ந்து
விரும்பினோர்க் களிக்கும் வள்ளலே சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. (5)

---

## வல்லபை கணேசர் பிரசாதமாலை.

திருநெடு மாலன் றுயிலடை நினது
சேவடித் துணைமலர்த் துகளான்
பெருநெடு மேனி தளிர்படப் பாம்பின்
பேருரு வகன்றமை மறவேன்

கருநெடுங் கடலை கடற்றுநற் றுணையே
கண்கண்மூன் றுடையசெங் கரும்பே
வருநெடு மருப்பொன் றிலகுவா ரணமே
வல்லபைக் கணேசமா மணியே. (1)

நளினமா மலர்வாழ் நான்முகத் தொருவ
னண்ணிநின் றுணையடி வழுத்திக்
களிநல னுடனிவ் வுலகெலாம் படைக்கக்
கடைக்கணித் தனையுள மகிழ்வே
னளிநல னுறுபே ரானந்தக் கடலே
யருமருந் தேயரு ளமுதே
வளிநிறை யுலகுக் கொருபெருந் துணையே
வல்லபைக் கணேசமா மணியே. (2)

தடக்கைமா முகமு முக்கணும் பவளச்
சடிலமுஞ் சதுர்ப்புயங் களுங்கை
விடக்கையங் குசமும் பாசமும் பதமு
மிறைப் பொழு தேனுமயான் மறவேன்
விடக்கள முடைய வித்தகப் பெருமான்
மிகமகிழ்ந் திடவருள் பேறே
மடக்கொடி நங்கை மங்கைநா யகியெம்
வல்லபைக் கணேசமா மணியே. (3)

பெருவய லாறு முகனைக மலர்ந்துன்
பெருமைகள் பேசிடத் தினமும்
திருவளர் மேன்மை திறமுறச் சூழ்ம
திருவருட் பெருமையை மறவேன்
மருவளர் தெய்வக் கற்பக மலரே
மனமொழி கடந்தவான் பொருளே
வருமலை வல்லிக் கொருமுதற் பேறே
வல்லபைக் கணேசமா மணியே. (4)

---

பாரிகவா தின்றளவு மிகவெழுதி யெழுதிப்
பார்க்கின்ற முடிபொன்றும் பார்த்ததிலை யம்மா. (5)

கண்ணேறு படுமெனநா னஞ்சுகின்றேன் பலகால்
கணவர்திரு வடிவழகைக் கண்டுகண்டு களிக்கில்
எண்ணுவென் னுசைவெள்ள மென்சொல்வழி கேளா
தெனையீர்த்துக் கொண்டுசெனைக் கேகுகின்ற தந்தோ
பெண்ணுசை பெரிதென்பர் விண்ணுளு மவர்க்கும்
பெண்ணுசை பெரிதலகா ணுணுசை பெரிதே
யுண்ணுடிப் பற்பலகாற் கண்ணேறு கழிக்க
லுறுகின்றேன் தோழிநின்னுற் பெறுகின்றபடியே. (6)

மனையணைந்து மலரணைமே லெனையணைந்த போது
மணவாளர் வடிவென்று மெனதுவடி வென்றுந்
தனைநினைந்து பிரித்தறிந்த தில்லையடி யெனைத்தான்
சற்றுமறியே னெனில்யான் மற்றறிவ தென்னே
தினையளவா யினும்விகற்ப வுணர்ச்சியென்ப திலையே
திருவாளர் கலந்தபடி செப்புவதெப் படியோ
உனையணைந்தா லிவ்வாறு நான்கேட்பே னப்போ
துன்னறிவு மென்னறிவு மோரறிவாங் காணே. (7)

என்னிருகண் மணியனையா ரென்னுயிர்நா யகனு
ரென்னுயிருக் கமுதானு ரெல்லாஞ்செய் வல்லார்
பொன்னணிபொற் சபையாளர் சிற்சபையா ரென்னைப்
புறம்புணர்ந்தா ரகம்புணர்ந்தார் புறத்தகத்தும் புணர்ந்தார்
அன்னியரல் லடியவரே யெனதுகுல தெய்வ
மருந்தவத்தாற் கிடைத்தகுரு வாகுமது மட்டோ
மன்னுறுமென் றனித்தாயுந் தந்தையுமங் கவரே
மக்கள்பொருள் மிக்கதிரு வொக்கலுமங் கவரே. (8)

தந்தையென்றாய் மகனென்றாய் மணவாள னென்றாய்
தகுமோவிங் கிதுவென்ன வினவுதியோ மடவாய்
சிந்தைசெய்து காணடிநீ சிற்சபையில் நடிக்குந்
திருவாள ரெனைப்புணர்ந்த திருக்கணவ ரவர்நம்
அந்தநடு முதலில்லா வரும்பெருஞ் சோதியரே
யண்டசரா சரங்களெலாங் கண்டதுவே நிலையே
எந்தவகை பொய்புகல்வேன் மற்றையர்போ லம்மா
லிங்கவர்தங் திருமேனி நானுமெனை யறிந்தே. (௯)

செம்பவளத் திருமலையோ மாணிக்க விளக்கோ
தெய்வமர கதத்திரளோ செழுநீலப் பொருப்போ
பம்புமணி யொளியோநற் பசும்பொன்னின் சுடரோ
படிகவண்ணப் பெருங்காட்சி தானோவென் றுணர்ந்தே
எம்பரமென் றெம்பெருமான் புறவண்ணம் யாதோ
வென்பாரே லகவண்ணம் யாருரைக்க வல்லார்
நம்பரமென் றென்னையன்று மணம்புரிந்தார் ஞான
சபைத்தலைவ ரவர்வண்ணஞ் சாற்றுவதென் றோழி. (௧௦)

தேவர்களோ முனிவர்களோ சிறந்தமுத்தர் தாமோ
தேர்ந்தசிவ யோகிகளோ செம்பொருள்கண் டோரோ
மூவர்களோ வைவர்களோ முதற்பரையோ பரமோ
முன்னியவென் றனித்தலைவர் தம்மியலை யுணர்ந்தார்
யாவர்களு மல்லவென்றால் யானுணர்ந்து மொழிதற்
கமையுமோவொருசிறிது மமையாது கண்டாய்
ஆவலொடு மன்பர் தொழச் சிற்சபையி னடிப்பா
ரவர்பெருமை யவரறிவா ரவருமறிந் திலரே. (௧௧)

வெடித்தளிந்த முக்கனியின் வடித்தரசந் தனிலே
விரும்புறவுட் பிழிந்தெடுத்த கரும்பிரதங் கலந்தே

தடித்தசெழும் பாற்பெய்து கோற்றேன்விட் டதனைத்
  தனித்தபர வமுதத்திற்றான்கலந்துண் டாற்போல்
இடித்திடித்தென் னுளமுழுதுந் தித்திக்கும் வார்த்தை
  யினிதுரைத்து மணம்புரிந்த வென்னுயிர்நா யகர்வான்
பொடித்திருமே னியரவரைப் புணரவல்லே னவர்தம்
  புகழுரைக்க வல்லேனோ வல்லேன்காண் றோழி. (கஉ)

புண்ணியனா ரென்னுளத்தே புகுந்தமர்ந்த தலைவர்
  பொதுவிளங்க நடிக்கின்ற திருக்கூத்தின் றிறத்தை
எண்ணியநா னெண்ணுதொறு முண்டுபசி தீர்ந்தே
  யிருக்கின்றே னடிக்கடிநீ யென்னையழைக் கின்றாய்
பண்ணுறுமென் றனிக்கணவர் கூத்தாடுஞ் சபையைப்
  பார்த்தாலும் பசிபோமே பார்த்திடலன் றியுமே
அண்ணுறுமத் திருச்சபையை நினைக்கினும் வேசாற
  லாறுமடி யூறுமடி யானந்த வமுதே. (கங)

தாழ்குழல்நீ யாண்மகன்போல் நாணமச்சம் விடுத்தே
  சபைக்கேறு கின்றாயென் றுரைக்கின்றாய் தோழி
வாழ்வகையென் கணவர்தமைப் புறத்தணைந்தா ளொருத்தி
  மாலெனும்பே ருடையாளோர் வளையாழிப் படையாள்
ஆழ்கடலிற் றுயில்கின்றாண் மாமணிமண் டபத்தே
  யான்கின்றா ளாண்மகனா யறிந்திலையோ வவரைக்
கேழ்வகையி லகம்புணர்ந்தே னவர்கருணையமுதங்
  கிடைத்ததுநா னாண்மகனா கின்றததி சயமோ. (கச)

துடியேறு மிடையுனக்கு வந்தவிறு மாப்பென்
  சொல்லென்றா யரிபிரமர் சுரர்முனிவர் முதலோர்
பொடியேறு வடிவுடையா ரென்கணவர் சபையின்
  பொற்படிக்கீழ் நிற்பதுபெற் றப்பரிசு நினைந்தே

இடியேறுபோன் றிறுமாந்திருக் கின்றாரடி நா
னெல்லாரு மதிசயிக்க வீண்டுதிருச் சபையின்
படியேறித் தலைவர்திரு வடியூறு மமுதம்
பருகுகின்றே னிறுமாக்கும் பரிசுரைப்ப தென்னே. (கரு)

பொய்பிடித்தா ரெல்லாரும் புறத்திருக்க நான்போய்ப்
பொதுநடங்கண் டுளங்களிக்கும் போதுமணவாளர்
மெய்பிடித்தாய் வாழியநீ சமரசசன் மார்க்கம்
விளங்கவுல கத்திடையே விளங்குகவென் றெனது
கைபிடித்தார் நானுமவர் கால்பிடித்துக் கொண்டேன்
களித்திடுக வினியுனைநாங் கைவிடோ மென்றும
மைபிடித்த விழியுலக ரெல்லாருங் காண
மாலையிட்டோ மென்றெனக்கு மாலையணிந் தாரே. (கசு)

மாதேகே ளம்பலத்தே திருநடஞ்செய் பாத
மலரணிந்த பாதுகையின் புறத்தெழுந்த வணுக்கள்
மாதேவ ருருத்திரர்க ளொருகோடி கோடி
வளைபிடித்த நாரணர்க ளொருகோடி கோடி
போதேயு நான்முகர்க ளொருகோடி கோடி
புரந்தரர்கள் பலகோடி யாகவுருப் புனைந்தே
ஆதேய ராகியிங்கே தொழில்புரிவா ரென்றா
லையர்திரு வடிப்பெருமை யாருரைப்பார் தோழி. (கஎ)

உருத்திரர்க ளொருகோடி நாரணர்பல் கோடி
யுறுபிரமர் பலகோடி யிந்திரர்பல் கோடி
பெருத்தமற் றைத்தேவர்களு முனிவர்களும் பிறரும்
பேசிலகந் தங்கோடி யாங்காங்கே கூடித்
திருத்தமுறு திருச்சபையின் படிப்புறத்தே நின்று
தியங்குகின்றார் நடங்காணுஞ் சிந்தையரா பந்தோ

வருத்தமொன்றுங் காணுதே நாளொருத்தி யேறி
மாநடங்காண் கின்றேனென் மாதவந்தான் பெரிதே(கஅ)

தூங்குகநீ யென்கின்றாய் தூங்குவனோ வெனது
துரைவருமோர் தருணமிதிற் றூக்கமுந்தான் வருமோ
ஈங்கினிநான் றனித்திருக்க வேண்டுவதா தலினு
லென்னுடைய தூக்கமெலா நின்னுடைய தாக்கி
ஏங்கலறப் புறத்தேபோய்த் தூங்குகநீ தோழி
யென்னிருகண் மணியனையா ரெனையணைந்தவுடனே
ஓங்குறவே நானவரைக் கலந்தவரும் நானு
மொன்றான பின்னருனை யெழுப்புகின்றே னுவந்தே(கக)

அருளுடையா ரெனையுடையா ரம்பலத்தே நடிக்கு
மழகரெலாம் வல்லவர்தா மணைந்தருளுங் கால
மிருளுடைய விரவகத்தே யெய்தாது கண்டா
யெதனுலென்றெண்ணுதியே லியம்புவன்கேள் மடவாய்
தெருளுடையென் றனித்தலைவர் திருமேனிச் சோதி
செப்புறுபார் முதல்நாத பரியந்தங் கடந்தே
அருளுறுமோர் பரநாத வெளிகடந்தப் பாலு
மப்பாலு விளங்குமடி யகம்புறத்து நிறைந்தே. (உ0)

தொடுக்கின்றேன் மாலையிது மணிமன்றில் நடிக்குந்
துரையவர்க்கே யவருடைய தூக்கியகான் மலர்க்கே
அடுக்கின்றார்க் கருளளிக்கு மூன்றியசே வடிக்கே
யவ்வடிக ளணிந்ததிரு வலங்காரக் கழற்கே
கொடுக்கின்றேன் மற்றவர்க்குக் கொடுப்பேனோ வவர்தாங்
குறித்ததனை வாங்குவரோ வணிதரந்தா முளரோ
எடுக்கின்றேன் கையின்மழு சிற்சபைபொற் சபைவா
ழிறைவரலா லென்மாலைக் கிறைவரிலை யெனவே. (உக)

பெருகியபே ரருளுடையா ரம்பலத்தே நடிக்கும்
பெருந்தகையென் கணவர்திருப் பேர்புகலென் கின்றாய்
அருகர்புத்த ராதியென்பே னயனென்பே னாரா
யணனென்பே னரனென்பே னாதிசிவ னென்பேன்
பருகுசதா சிவமென்பேன் சத்திசிவ மென்பேன்
பரமமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரம மென்பேன்
துருவுசுத்த பிரமமென்பேன் துரியநிறை வென்பேன்
சுத்தசிவ மென்பனிவை சித்துவிளை யாட்டே. (22)

சிற்சபையில் நடிக்கின்ற நாயகனார் தமக்குச்
சேர்ந்தபுறச் சமயப்பேர் பொருந்துவதோ வென்றாய்
பிற்சமயத் தார்பெயரு மவர்பெயரே கண்டாய்
பித்தரென்றே பெயர்படைத்தாற் கெப்பெயரொவ்வாதோ
அச்சமயத் தேவர்மட்டோ நின்பெயரென் பெயரு
மவர்பெயரே யெவ்வுயிரின் பெயருமவர் பெயரே
சிற்சபையி லென்கணவர் செய்யுமொரு ஞானத்
திருக்கூத்துக் கண்டவரே தெரியுமிது தோழி. (23)

சாதிசம யங்களிலே வீதிபல வகுத்த
சாத்திரக்குப் பைகளெல்லாம் பாத்திரமன் றெனவே
ஆதியிலென் னுளத்திருந்தே யறிவித்த படியே
யன்பாலின் றுண்மைநிலை யறிவிக்க வறிந்தேன்
ஓதியுணர்ந் தோர்புகழுஞ் சமரசசன் மார்க்க
முற்றேன்சிற் சபைகாணப் பெற்றேன்மெய்ப் பொரு
சோதிநடத் தரசையென்ற னுயிர்க்குயிராம் பதியைச் [ளாஞ்
சுத்தசிவ நிறைவையுள்ளே பெற்றுமகிழ்ந் தேனே. (24)

---

## தோழிக் குரிமை கிளத்தல்.

பிரமமென்றும் சிவமென்றும் பேசுகின்ற நிலைதான்
பெருநிலையே யிந்நிலையிற் பேதமுண்டோ வெனவே
தரமறிய வினவுகின்றாய் தோழியிது கேள்நீ
சமரசசன் மார்க்கநிலை சார்தியெனி லறிவாய்
திரமுற்வா யினுமெல்லா மாகியல்லா தாகுந்
திருவருளாம் வெளிவிளங்க விளங்குதனிப் பொருளாஞ்
சிரமுறுமோர் பொதுவுண்மைச் சிவப்பிரம முடியே
திகழ்மறையா கமம்புகலுந் திறனிதுகண் டறியே. (1)

இலங்குகின்ற பொதுவுண்மை யிருந்தநிலை புகலென்
றியம்புகின்றாய் மடவாய்கேள் யானறியுந் தரமோ
துலங்குமதை யுரைத்திடவுங் கேட்டிடவும் படுமோ
சொல்லளவோ பொருளளவோ துன்னுமறி வளவோ
விலங்குகின்ற தத்துவங்க ளத்தனையுங் கடந்த
மேனிலையென் றந்தமெலாம் விளம்புகின்ற தன்றி
வலங்கொளுமம் மேனிலையி னுண்மையெது வென்றால்
மவுனஞ்சா திப்பதன்றி வாய்திறப்ப திலையே. (2)

கிளக்கின்ற மறையுளவை யாகமப்பே ரளவை
கிளந்திடுமெய்ச் சாதனமா மளவையறி வளவை
விளக்குமிந்த வளவைகளே கொண்டுநெடுங் கால
மேலவர்க ளளந்தளந்து மெலிகின்றா ராங்கே
அளக்கின்ற கருவியெலாந் தேய்ந்திடக்கண் டாரே
லன்றியொரு வாறேனு மளவுகண்டா ரிலையே
துளக்கமுறு சிற்றறிவா லொருவாறென் றுரைத்தேன்
சொன்னவெளி யளையேனுந் துணிந்தளக்கப் படுமோ. (3)

---

## உத்தரஞான சிதம்பர மான்மியம்.

### கலித்துறை.

கொல்லா நெறியது கோடா நிலையது கோபமிலார்
சொல்லா லுவந்தது சுத்தசன் மார்க்கந் துணிந்ததுல
கெல்லா மளிப்ப திறந்தா லெழுப்புவ தேகமொன்றுஞ்
செல்லா வளத்தின துத்தர ஞான சிதம்பரமே. (1)

காணாத காட்சிகள் காட்டுவிக் கின்றது காலமெல்லாம்
வீணாள் கழிப்பவர்க் கெய்தரி தானது வெஞ்சினத்தார்
கோணாத நெஞ்சிற் குலாவிநிற் கின்றது கூடிநின்று
சேணாடர் வாழ்த்துவ துத்தர ஞான சிதம்பரமே. (2)

ஏகாந்த மாகி வெளியா யிருந்தநிங் கென்னைமுன்னே
மோகாந்த காரத்தின் மீட்டதென் னெஞ்ச முயங்கிரும்பின்
மாகாந்த மானது வல்வினை தீர்த்தெனை வாழ்வித்தென்றன்
தேகாந்த நீக்கிய துத்தர ஞான சிதம்பரமே. (3)

---

## திருவடிக்கண்ணி.

### திருச்சிற்றம்பலம்.

மின்னிடையாள் காண விளங்குமன்று ளாடுகின்ற
வென்னுடையா யுன்ற னிணையடிதா னேவாதா. (1)

வன்னமுதே யின்ப மலியமன்றி லாடுகின்ற
வென்னமுதே யுன்ற னிணையடிதா னேவாதா. (2)

கண்ணியமெய் யன்பர் நயக்கமன்றி லாடுகின்றாய்
புண்ணியனே யுன்றன் பொன்னடிதா னேவாதா. (3)

அன்பரின்பங் கொள்ளநட மம்பலத்தே யாடுகின்ற
வின்புறவா முன்ற னிணையடிதா னேவாதா. (4)

எள்ளலற வம்பலத்தே யின்பநட மாடுகின்றாய்
வள்ளலே யுன்றன் மலரடிதா னேவாதா. (5)

சைவ நிலைத்துத் தழைத்தோங்க வாடுகின்றாய்
தெய்வ மணியே திருவடிதா னேவாதா. (6)

எல்லாரு மின்புற் றிருக்கநட மாடுகின்றாய்
வல்லாரின் வல்லாய் மலர்ப்பாத நோவாதா. (7)

அவமே கழிந்தின்ப மன்பர்கொள வாடுகின்றாய்
சிவமே நினது திருவடிதா னேவாதா. (8)

---

## சற்குருமணிமாலை.

மாற்றறி யாதசெ ழும்பசும் பொன்னே
மாணிக்க மேசுடர் வண்ணக்கொ ழுந்தே
கூற்றறி யாதபெ ருந்தவ ருள்ளக்
கோயிலி ருந்தரு ணப்பெருங் குன்றே
வேற்றறி யாதசிற் றம்பலக் கனியே
விச்சையில் வல்லவர் மெச்சுவி ருந்தே
சாற்றறி யாதவென் சாற்றுங்க ளித்தாய்
தனிநட ராஜவென் சற்குரு மணியே. (1)

கற்கரை யும்படி கரைவிக்குங் கருத்தே
கண்மணி யேமணி கலந்தகண் ணொளியே
சொற்கரை யின்றிய வொளியினுள் ளொளியே
துரியமுங் கடந்திட்ட பெரியசெம் பொருளே

சிற்கரை யிரையறு திருவருட் கடலே
தெள்ளமு தேகனி யேசெழும் பாகே
சர்க்கரை யேயது சார்ந்தசெந் தேனே
தனிநட ராஜவென் சற்குரு மணியே. (2)

பன்னெறிச் சமயங்கண் மதங்களென் றிடுமோர்
பவநெறி யிதுவரை பரவிய திதனால்
செந்நெறி யறிந்தில ரிறந்திறந் துலகோர்
செறியிரு ளடைந்தன ராதலி னினிநீ
புன்னெறி தவிர்த்தொரு பொதுநெறி யெனும்வான்
புத்தமு தருள்கின்ற சுத்தசன் மார்க்கத்
தன்னெறி செலுத்துக வென்றவென் னரசே
தனிநட ராஜவென் சற்குரு மணியே. (3)

நண்ணிய மதநெறி பலபல வவையே
நன்றற நின்றன சென்றன சிலவே
யண்ணிய வுலகின ரறிகிலர் நெடுநா
ளலைதரு கின்றன ரலைவற மகனே
புண்ணிய முறுதிரு வருணெறி யதுவே
பொதுநெறி யெனவறி வுறமுய லுதிநீ
தண்ணிய வமுதுணத் தருதன மென்றாய்
தனிநட ராஜவென் சற்குரு மணியே. (4)

பவநெறி செலுமவர் கனவினு மறியாப்
பரம்பொரு ளாகியென் னுளம்பெறு மொளியே
நவநெறி கடந்தவோர் ஞானமெய்ச் சுகமே
நானரு ணிலைபெற நல்கிய நலமே
சிவநெறி யேசிவ நெறிதரு நிலையே
சிவநிலை தனிலுறு மநுபவ நிறைவே

தவநெறி செலுமவர்க் கினியநற் றுணையே
தனிநட ராஜவென் சற்குரு மணியே. (5)

---

## நெஞ்சொடுகிளத்தல்.

### கலித்தாழிசை.

அடங்குநா ளில்லா தமர்ந்தானைக் காணவே
தொடங்குநா ளல்லதன்றோ—நெஞ்சே (1)
தொடங்குநா ளல்ல தன்றோ.

வல்லவ ரெல்லாமும் வல்லானைக் காணற்கே
நல்லநா ளெண்ணிய நாள்—நெஞ்சே
நல்லநா ளெண்ணிய நாள். (2)

காலங் கடந்த கடவுளைக் காணற்குக்
காலங் கருதுவதேன்—நெஞ்சே
காலங் கருதுவ தேன். (3)

ஆலமமு தாக்கு மண்ணலைக் காணற்குக்
காலங் கருதுவதேன்—நெஞ்சே
காலங் கருதுவ தேன். (4)

தடையாது மில்லாத் தலைவனைக் காணற்கே
தடையாது மில்லைகண்டாய்—நெஞ்சே
தடையாது மில்லைகண் டாய். (5)

கையு ளமுதத்தை வாயுளமு தாக்கப்
பையுளுனக் கென்னையோ—நெஞ்சே
பையுளுனக் கென்னையோ. (6)

என்னுயிர் காதலை யான்கண் டணைதற்கே
உன்னுவ தென்னைகண்டாய்—நெஞ்சே
யுன்னுவ தென்னைகண் டாய். (7)

நான்பெற்ற செல்வத்தை நான்பற்றிக் கொள்ளற்கே
ஏன்பற்றுவா யென்பதார்—நெஞ்சே
யேன்பற்று வாயென்ப தார். (8)

தத்துவாதீதத் தலைவனைக்*காணற்குத்
தத்துவ முன்னுவதேன்—நெஞ்சே
தத்துவ முன்னுவ தேன். (9)

ஒக்க வமுதத்தை யுண்டோ மினிச்சற்றும்
விக்கல் வராதுகண்டாய்—நெஞ்சே
விக்கல் வராதுகண்டாய். (10)

---

தான்பெற்ற பேறு.

மனமெனுமோர் பேய்க்குரங்கு மடைப்பயலே நீதான்
மற்றவர்போ லெனைநினைத்து மருட்டாதே கண்டாய்
இனமுறவென் சொல்வழியே யிருத்தியெனிற் சுகமா
யிருந்திடுநீ யென்சொல்வழி யேற்றிலையா னாலோ
தினையளவுன் னதிகாரஞ் செல்லவொட்டே னுலகஞ்
சிரிக்கவுனை யடக்கிடுவேன் றிருவருளாற் கணத்தே
நனவிலெனை யறியாயோ யாரெனநீ யிங்கிருந்தாய்
ஞானசபைத் தலைவனுக்கு நல்லபிள்ளை நானே. (1)

பன்முகஞ்சேர் மனமெனுமோர் பரியாசப் பயலே
பதையாதே சிதையாதே பார்க்குமிட மெல்லாங்
கொன்முகங்கொண் டடிக்கடிபோய்க் குதியாதே யெனது
குறிப்பின்வழி நின்றிடுநின் குதிப்புநட வாது
என்முனமோர் புன்முனைமே லிருந்தபனித் துளிநீ
யிம்மெனுமுன் னடக்கிடுவே னென்னையறி யாயோ
பின்முனென நினையேல்காண் சிற்சபையி னடிக்கும்
பெரியதனித் தலைவனுக்குப் பெரியபிள்ளை நானே. (2)

மயங்குபுத்தி யெனுமுலக வழக்காளிப் பயலே
வழிதுறையீ தென்றறியாய் வகைசிறிது மறியாய்
உயங்கிவிசா ரித்திடவே யோடுகின்றா யுணரு
முளவறியாய் வீணுழைப்பிங் குழைப்பதிலென்பயனோ
வயங்குமன மடங்கியவா றடங்குகநீ யலையேல்
மடித்திடுவேன் கணத்திலுனை வாய்மையிது கண்டாய்
இயங்கவென்னை யறியாயோ யாரெனவெண் ணினையோ
வெல்லாஞ்செய் வல்லவருக் கினியபிள்ளை நானே. (3)

கலையறியாச் சித்தமெனுங் கனமோசப் பயலே
காலறியாய் தலையறியாய் காண்பனகண் டறியாய்
நிலையறியா யொன்றையொன்றா நிச்சயித்திவ் வுலகை
நெறிமயங்க மயக்குகின்றாய் நீயோவிங் குறுவாய்
அலையறியாக் கடல்போலே யசைவறநின் றிடுநீ
யசைவாயேலரைக்கணத்தே யடக்கிடுவே னுனைத்தான்
அலைவறிவா யென்றனைநீ யறியாயோ நான்றா
ளுண்டவன்றன் றுண்டவங்கண் டமர்ந்தபிள்ளை நானே.

அகங்கார மெனும்பொல்லா வடவாதிப் பயலே
யடுக்கடுக்கா யெடுக்கின்றா யடுத்துமுடுக் கின்றாய்
செகங்காணத் தலைகாலுந் தெரியாம லலைந்து
திரிகின்றாய் நின்செபந்தான் சிறிதுநட வாது
இகங்காண வடங்குகநீ யடங்காயேற் கணத்தே
யிருந்தவிடம் தெரியாதே யெரிந்திடச்செய் திடுவேன்
சுகங்காண வென்றனைநீ யறியாயோ நான்றான்
சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றபிள்ளை நானே. (5)

மானெனுமோர் சகசாலச் சிறுக்கியிது கேளுன்
வஞ்சகக்கூத் தெல்லாமோர் மூட்டையெனக் கட்டி

ஈனமுற நின்றலேமே லேற்றெடுத்துக் கொண்டுன்
னேவல்புரி பெண்களோடே யிவ்விடம்விட் டேகிக்
கானடைந்து கருத்தடங்கிப் பிழைத்திடுநீ யிலேயேல்
கணத்திலுனே மாய்ப்பேனுன் கணத்தினொடுங் கண்டாய்
ஏனெனைநீ யறியாயோ சிற்சபையி னடஞ்செ
யிறைவனருட் பெருஞ்சோதிக் கினியபிள்ளை நானே.()

மாயையெனும் படுதிருட்டுச் சிறுக்கியிது கேளுன்
மாயையெலாஞ் சுமைசுமையா வரிந்துகட்டிக் கொண்டுன்
சாயையெனும் பெண்ணினத்தார் தலைமேலு முனது
தலைமேலுஞ் சுமந்துகொண்டோர் சந்துவழி பார்த்தே
பேயெனக்காட் டிடையோடிப் பிழைத்திடுநீ யிலேயேல்
பேசுமுன்னே மாய்த்திடுவேன் பின்னுமுன்னும பாரேன்
ஆயெனைநீ யறியாயோ வெல்லாஞ்செய் வல்லா
ரருளமுதுண் டருணிலேமே லமர்ந்தபிள்ளை நானே.(7)

கன்மமெனும் பெருஞ்சிலுக்குக் கடுங்கலகப் பயலே
கங்குகரை காணாத கடல்போலே வினைகள
நன்மையொடு தீமையெனப் பலவிகற்பங் காட்டி
நடத்தினைநின் னடத்தையெல்லாஞ் சிறிதுநடவாது
என்முனிருந் தனையெனினீ யழிந்திடுவா யதனு
லிக்கணத்தே நின்னினத்தோ டேகுகநீ யிலேயேல்
இன்மையுற மாய்த்திடுவே னென்னையறி யாயோ
வெல்லாஞ்செய் வல்லவருக் கினியபிள்ளைநானே. (8)

எத்துணையுங் காட்டாத வாணவமென் றிடுமோ
ரிருட்டறைக்கோ ரதிகாரக் குருட்டுமுட்ப் பயலே
இத்தனைநாள் பிடித்ததுனைக் கண்டுதுரத் திடவே
யின்னுமரைக் கணந்தரியே னிக்கணத்தே நினது

பொத்தியசுற் றத்துடனே போய்விடுதி யிலையேல்
 பூரணமெய் யருளொளியாற்பொன்றுவிப்பே னினையே
சத்தியுஞ்சொன் னேனெனைநீ யறியாயோ ஞான
 சபைத்தலைவன் றருதலைமைத் தனிப்பிள்ளை நானே.(9)

பேசுதிரோ தாயியெனும் பெண்மடவா யிதுகேள்
 பின்முனறி யாதெனைநீ யென்முன்மறைக் காதே
வேசறமா மலவிரவு முழுதும்விடிந் ததுகாண்
 வீசுமருட் பெருஞ்சோதி விளங்குகின்ற தறிநீ
ஏசுறுநின் செயலனைத்து மென்னளவி னடவா
 திதையறிந்து விரைந்தெனைவிட் டேகுகவிக் கணத்தே
மாசறுமென் சரிதமொன்றுந் தெரிந்திலையோ வெல்லாம்
 வல்லவொரு சித்தருக்கே நல்லபிள்ளை நானே. (10)

தூக்கமெனுங் கடைப்பயலே சோம்பேறி யிதுகேள்
 துணிந்துனது சுற்றமொடு சொல்லுமரைக் கணத்தே
தாக்குபெருங் காட்டகத்தே யேகுகநீ யிருந்தால்
 தப்பாதுன் றலைபோகுஞ் சத்தியமீ தறிவாய்
ஏக்கமெலாந் தவிர்த்துவிட் டேனுக்கமெலாம் பெற்றே
 னின்பமுறுகின்றேனீ யென்னையடை யாதே
போக்கில்விரைந் தோடுகநீ பொற்சபைசிற் சபைவாழ்
 பூரணர்க்கின் கன்பான பொருளனென வறிந்தே. (11)

பயமெனுமோர் கொடும்பாவிப் பயலேநீ யிதுகேள்
 பற்றறவென் றனைவிடுத்துப்பனிக்கடல்வீழ்ந் தொளிப்பாய்
தயவினுரைத் தேனின்னு மிருத்தியெனி லுன்றன்
 றலைதனக்குத் தீம்புவருந் தலைமட்டோ வினது
செயலறுமுள் ளுடம்பழியுஞ் சுற்றமெலா மிறக்குந்
 தீர்ந்ததினி யில்லையென்றே திருவார்த்தை பிறக்கும்

அயலிடைநேர்ந்தோடுகநீ யென்னையறியாயோ
வம்பலத்தென் னப்பனரு ணம்புபிள்ளை நானே. ()

கோபமெனும் புலைப்பயலே காமவலைப் பயலே
கொடுமோகக் கடைப்பயலே குறும்புமதப் பயலே
தாபவுலோ பப்பயலே மாற்சரியப் பயலே
தயவுடனிங் கிசைக்கின்றேன் றாழ்த்திருக்கா தீர்காண்
தீபமெலாங் கடந்திருள்சேர் நிலஞ்சாரப்போவீர்
சிறிதுபொழு திருந்தாலுந் திண்ணமிங்கே யழிவீர்
சாபமுறு முன்னமறிந் தோடுமினோ வென்னைத்
தானறியீர் தனித்தலைவன் றலைப்பிள்ளை நானே. ()

பசியெனுமோர் பெரும்பாவிப் பயலேதுன் பெனுமோர்
படுபாவிப் பயலேயா பத்தெனும்பொய்ப் பயலே
வசியவத்தைக் கடைப்பயலே தடைப்பயலே யிடராம்
வன்பயலே நீவிரெலா மென்புடைநில் லாதீர்
நசியவுமக் குளமுளதோ விக்கணத்தே நீவிர்
நடந்துவிரைந் தோடுமினோ நாடறியா வனத்தே
கசியுமனத் தெனையறியீர் சிற்சபையில் விளங்குங்
கடவுள்மகிழ்ந் தளித்ததனிக் கதிர்ப்பிள்ளை நானே. ()

மரணமெனும் பெருந்திருட்டு மாபாவிப் பயலே
வையகமும் வானகமு மற்றகமுங் கடந்தே
பரணமுறு பேரிருட்டுப் பெருநிலமுந் தாண்டிப்
பசையறநீ யொழிந்திடுக விங்கிருந்தா யெனிலோ
இரணமுற வுனைமுழுது மடித்திடுவே னிதுநா
னென்னுடையா னருளாணை யென்குருமே லாணை
அரணுறுமென் றனைவிடுத்தே யோடுகநீ நான்று
னருட்பெருஞ்சோதிப்பதியை யடைந்தபிள்ளை காணே.

---

## உறுதி கூறல்.

சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச்சண் டையிலே
ஆதியிலே யபிமானித் தலைகின்ற வுலகீ
ரலைந்தலைந்து வீணேநீ ரழிதலழ கலவே
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே ஞான
நிருத்தமிடுந் தனித்தலைவ ரொருத்தரவர் தாமே
வீதியிலே யருட்சோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றே னுமையே. ()

காடுவெட்டி நிலந்திருத்திக் காட்டெருவும் போட்டுக்
கரும்பைவிட்டுக் கடுவிதைத்துக் களிக்கின்ற வுலகீர்
கூடுவிட்டுப் போயினபின் எதுபுரிவீ ரெங்கே
குடியிருப்பீ ரையோநீர் குறித்தறியீ ரிங்கே
பாடுபட்டீர் பயனறியீர் பாழ்க்கிறைத்துக் கழித்தீர்
பட்டதெலாம் போதுமிது பரமர்வரு தருணம்
ஈடுகட்டி வருவீரே லின்பமிகப் பெறுவீ
ரெண்மையுரைத் தேனலநா னுண்மையுரைத் தேனே.

ஆற்றுவெள்ளம் வருவதன்முன் னணைபோட வறியீ
ரகங்காரப் பேய்பிடித்தீ ராடுதற்கே யறிவீர்
கூற்றுவருங் காலதனுக் கெதுபுரிவீ ரையோ
கூற்றுதைத்த சேவடியைப் போற்றவிரும் பீரே
வேற்றுரைத்து வினைபெருக்கி மெலிகின்ற வுலகீர்
வீணுலகக் கொடுவழக்கை விட்டுவிட்டு வம்மின்
சாற்றுவக்க வெனதுதனித் தந்தைவரு கின்ற
தருணமிது சத்தியஞ்சிற் சத்தியைச்சார் வதற்கே. ()

வையகத்தீர் வானகத்தீர் மற்றகத்தீர் நுமது
வாழ்கையெலாம் வாழ்கையென மதித்துமயங் காதீர்
மையகத்தே யுறுமரண வாதனையைத் தவிர்த்த
வாழ்க்கையதே வாழ்க்கையென மதித்ததனைப் பெற
மெய்யகத்தே விரும்பியிங்கே வந்திடுமி னெனது [வே
மெய்ப்பொருளாந் தனித்தந்தை யித்தருணந் தனிலே
செய்யகத்தே வளர்ஞான சித்திபுரந் தனிலே
சித்தாடல் புரிகின்றார் திண்ணமிது தானே.

---

## இரங்கல்.

புலைத்தொழிலே புரிகின்றீர் புண்ணியத்தைக்
கருங்கடலிற் போக விட்டீர்
கொலைத்தொழிற் கொடியீர்நீர் செத்தாரைச்
சுடுகின்ற கொடுமை நோக்கிக்
கலைத்தொழிற் பெரியருளங் கலங்கினரக்
கலக்கமெலாங் கடவு ணீக்கித்
தலைத்தொழில்செய் சன்மார்க்கந் தலையெடுக்கப்
புரிகுவதித் தருணந் தானே

---

## வைத்தியநாதர் பதிகம்.

ஓங்கமடவாரின்பமே பிரமபதம்வர்களுந்தியே வைகுந்தமே
லோங்குதனமேகைலையவர்குமுதவாயினிதழூறலே யமுதமவர்தம்
பாகனையமொழியே நல்வேதவாக்கியமவர்கள்பார்வையே கருணை [நோக்கம்
பாங்கினவரோடு விளையாடவருசுகமதே பரமசுகமாகுமிந்த
ஊகமறியாமலே தேகமிகவாடினீருறுசுவைப்பழ மெறிந்தே
யுற்றவெறுவாய்மெல்லும் வீணர்நீரென்றநல்லோரைநிந்திப் [பாவர்தம்
வர்கைவாய் மதமறமருந்தருள்கதவசிகாமணியுலக நாதவள்ளல்
மகிழவருவேளூரிலன்பர்பவரோகமறவளர் வைத்தியநாதனே (1)

உண்டதே யுணவுதான் கண்டதே காட்சியிதையுற்றறியமாட்டார்களா
யுயிருண்டு பாவபுண்ணியமுண்டு வினைகளுண்டுறுபிறவியுண்டு
[துன்பத்
தொண்டதே செயுநரகவாதை யுண்டின்பமுறு சொர்க்கமுண்டிவையு
[மன்றித்
தொழுகடவுளுண்டு கதியுண்டென்று சிலர்சொலுந் தூர்ப்புத்தி
[யாலுலகிலே
கொண்டதேசாதகம் வெறுத்துமடமாதர்தங் கொங்கையும் வெறுத்
[தீர்கையில்
கொண்டதீங்கனியை விட்டந்தரத் தொருபழங்கொள்ளுவீரென்
[பாந்த
வண்டர்வாயற வொருமருந்தருள்கதவசிகாமணியுலக நாதவள்ளல்
மகிழவருவேளூரிலன்பர்பவ ரோகமறவளர் வைத்தியநாதனே.(2)

கல்லையுமுருக்கலாம் நாருரித்திடலாம் கனிந்தகனியாச் செய்யலாம்
கடுவிடமு முண்ணலா மமுதாக்கலாங் கொடுங்காரடி புலிசிங்க
[முதலா
வெல்லுமிருகங்களையும் வசமாக்கலாமன்றி வித்தையுங்கற்பிக்கலாம்
மிக்கவாழைத்தண்டை விறகாக்கலாமணலைமேவு தேர்வடமாங்
[கலா
மில்லையொருதெய்வம் வேறில்லை யெம்பாலின்ப மீகின்ற பெண்க
[ளவரே
யெங்கள்குலதெய்வமெனு மூடரைத்தேற்றவெளி லெத்துணையு
[மரிதரிதுகாண்
வல்லையவருணர்வுறமருந்தருள்கதவசிகாமணியுலகநாத வள்ளல்
மகிழவருவேளூரிலன்பர்பவரோகமறவளர் வைத்தியநாதனே (3)

படியளவுசாம்பலைப்பூசியேசைவம் பழுத்த பழமோ பூசணைப்
பழமோவெனக்கருங்கல் போலுமசையாது பாழாகுகின்றார்க
[ளோர்
பிடியளவு சாதமுங்கொள்ளார்களல்ல தொருபெண்ணை யெனினுங்
[கொள்கிலார்
பேய்கொண்டதோவன்றி நோய்கொண்டதோ பெரும்பித்தேற்ற
[தோவறிகிலேன்

செடியளவு மூத்தைவாய்ப் பல்லழுக்கெல்லாந் தெரிந்திடக் காட்டி
[நகைதான்
செய்துவளையாப் பெருஞ் செம்மரத்துண்டுபோற் செம்மாப்பவர்
[வாய்மதம்
மடியளவதா வொருமருந்தருள்க தவசிகாமணி யுலகநாத வள்ளல்
மகிழவருவேளூரிலன்பர் பவரோகமறவளர் வைத்தியநாதனே (4)

## ஸ்ரீராமநாமத் திருப்பதிகம்.

திருமகளெம் பெருமாட்டி மகிழ்மண வாளா
செழுங்கனியே கொழும்பாகே தேனே தெய்வத்
தருமகனைக் காத்தருளக் கரத்தே வென்றித்
தனுவெடுத்த வொருமுதலே தருமத் தேவே
இருமையுமென் னுளத்தமர்ந்த ராம நாமந்
தென்னரசே யென்னமுதே யென்று பேசின்
மருமலர்ப்பொன் னடிவழுத்துஞ் சிறியே னந்தோ
மனந்தளர்ந்தே னறிந்துமருள் வழங்கி லாயே. (1)

கலைக்கடலே கருணைநெடுங் கடலே கானங்
கடந்தகடங் கடலேயென் கருத்தே ஞான
மலைக்கணெழுஞ் சுடரேவான் சுடரே யன்பர்
மனத்தொளிருஞ் சுயஞ்சுடரே மணியே வானோர்
தலைக்கணுறு மகுடசிகா மணியே வாய்மைத்
தசரதன்றன் குலமணியே தனியே யுன்னை
நிலைக்கணுறுஞ் சீராம வள்ளலே யென்
னிலையறிந்தும் அருளவின்னு நினைந்தி லாயே. (2)

மண்ணுளா நின்றவர்தம் வாழ்வு வேண்டேன்
மற்றவர்போற் பற்றடைந்து மாள வேண்டேன்
விண்ணுளா நின்றவொரு மேன்மை வேண்டேன்
வித்தகநின் றிருவருளே வேண்டி நின்றேன்

புண்ணுளா நின்றமன முடையேன் செய்த
 பொய்யனைத்துந் திருவுளத்தே பொறுப்பா யன்றிக்
கண்ணுளா சுடர்க்கமலக் கண்ணு வென்னைக்
 கைவிடிலென் செய்வேனே கடைய னேனே. (3)

தெவ்வினையா ரரக்கர்குலஞ் செற்ற வெற்றிச்
 சிங்கமே யெங்கள் குலதெய்வ மேயோ
வெவ்வினைதீர்த் தருள்கின்ற ராம நாம
 வியன்சுடரே யிவ்வுலக விடயக் காட்டில்
இவ்வினையே னகப்பட்டேன் புலனுங் கள்வர்க்
 கிலக்கானேன் றுணையொன்று மில்லே னந்தோ
செய்வினை யொன்றறியே னிங்கென்னை யெந்தாய்
 திருவுளத்திற் சேர்த்திலையேற் செய்வ தென்னே. (4)

வான்வண்ணக் கருமுகிலே மழையே நீல
 மணிவண்ணக் கொழுஞ்சுடரே மருந்தே வானத்
தேன்வண்ணச் செழுஞ்சுவையே ராம நாமத்
 தெய்வமே நின்புகழைத் தெளிந்தே னோதா
ஊன்வண்ணப் புலைவாயா ரிடத்தே சென்றுங்
 குழைக்கின்றேன் செய்வகையொன் றுணரேனந்தோ
கான்வண்ணக் குடும்பத்திற் கிலக்கா வென்னைக்
 காட்டினையே யென்னேநின் கருணை யிதோ. (5)

பொன்னுடையார் வாயிலிற்போய் வீணே காலம்
 போக்குகின்றே னிவ்வுலகப் புணர்ப்பை வேண்டி
என்னுடையாய் நின்னடியை மறந்தே னந்தோ
 வென்செய்கே னென்செய்கே னேழை யேனுன்
பின்னுடையேன் பிழையுடையே னல்லா லுன்றன்
 பேரருளு முடையேனோ பிறந்தேன் வாளா

உன்னுடைய திருவுளத்தென் னினைதி யோவென்
றொருமுதல்வா சீராமா வுணர்கி லேனே. (6)

அறம்பழுக்குந் தருவேயென் குருவே யென்ற
ருயிருக் கொருதுணையே யரசே பூவை
நிறம்பழுக்க வழகொழுகும் வடிவக் குன்றே
நெடுங்கடலுக் கணையமைத்த நிலையே வெய்ய
மறம்பழுக்கு மிலங்கையிரா வணனைப் பண்டோர்
வாளியினாற் பணிகொண்ட மணியே வாய்மைத்
திறம்பழுக்குஞ் சீராம வள்ள லேநின்
றிருவருளே யன்றிமற்றோர் செயலி லேனே. (7)

கல்லாய வன்மனத்தார் தம்பாற் சென்றே
கண்கலக்கங் கொள்கின்றேன் கவலை வாழ்வை
எல்லாமுள் ளிருந்தறிந்தா யன்றோ சற்று
மிரங்கிலையெம் பெருமானே யென்னே யென்னே
பொல்லாத வெவ்வினையே னெனினு மென்னைப்
புண்ணியனே புரப்பதருட் புகழ்ச்சி யன்றோ
அல்லார்ந்த துயர்க்கட லின்றெடுத் திடாயே
லாற்றேனுன் பழிநின்பா லாக்கு வேனே. (8)

மையான நெஞ்சகத்தோர் வாயில் சார்ந்தே
மனந்தளர்ந்தேன் வருந்துகின்ற வருத்த மெல்லாம்
ஐயாவென் னுளத்தமர்ந்தாய் நீதான் சற்று
மறியாயோ வறியாயே லறிவா ரியாரே
பொய்யான தன்மையினே னெனினு மென்னைப்
புறம்விடுத்த லழகேயோ பொருளா வெண்ணி
மெய்யாவென் றனையக்கா லாண்டா யிக்கால்
வெறுக்கனையே லெங்கேயான் மேவு வேனே. (9)

கூறுவதோர் குணமில்லாக் கொடிதாஞ் செல்வக்
குருட்டறிவோ ரிடைப்படுமென் குறைகளெல்லாம்
ஆறுவதோர் வழிகாணே னந்தோ வந்தோ
வவலமெனுங் கருங்கடலி லழுந்துகின்றேன்
ஏறுவதோர் வகையறியே னெந்தா யெந்தா
யேற்றுகின்றோர் நின்னையன்றி யில்லே னென்னைச்
சீறுவதோ விரங்குவதோ யாதோ வுன்றன்
றிருவுளத்தைத் தெரியேனே சிறிய னேனே. (10)

---

மெய்யருள் வியப்பு மாலை.

பல்லவி.

எனக்கு முனக்கு மிசைந்த பொருத்தமென்ன பொருத்தமோ
இந்தப் பொருத்த முலகில் பிறருக்கெய்தும் பொருத்தமோ.

சரணங்கள்.

என்னுடலுமுயிரும் பொருளு நின்னதல்லவோ
வெந்தாயிதனைப் பெறுகவென நானின்று சொல்லவோ
சின்னவயதிலென்னை யாண்ட திறத்தை நினைக்குதே
சிந்தைநினைக்கக்கண்ணீர் பெருக்கியுடம் பைநனைக்குதே (எனக்கு)

அப்பாநின்னை யன்றி யெங்குமலைப் பாரில்லையே
யந்தோநின்னையன்றி யெங்கு மருள்வாரில்லையே
எப்பா லவர்க்கு நின்னையன்றி யிறைமை யில்லையே
யெனக்கு நின்மேலன்றி யுலகிலிச்சையில்லையே. (எனக்கு)

அரசேயுன்னையணைக்க வெனக்குள்ளாசை பொங்குதே
யலைப்போமென்னு முண்மை யாலென்னுவிதங்குதே
விரைசேர் பாதம் பிடிக்க வென்கை விரைந்து நீளுதே
மேவிப் பிடித்துக் கொள்ளுந் தோறுமுவகையாளுதே. (எனக்கு)

---

## ஆனந்தக் களிப்பு.

### பல்லவி.

ஞானமருந்திம் மருந்து - சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து.

### சரணங்கள்.

அருட்பெருஞ்சோதி மருந்து - என்னை
யைந்தொழில் செய்தற் களித்தமருந்து
பொருட்பெரும் போகமருந்து - என்னைப்
புறத்து மகத்தும் புணர்ந்தமருந்து. (ஞான)

காணாது காட்டுமருந்து - என்றன்
கையிற்பொற் கங்கணங் கட்டுமருந்து
ஆணாகிப் பெண்ணா மருந்து - அது
வாகிமணிமன்றி லாடுமருந்து. (ஞான)

அன்பர்க்கெளிய மருந்து - மற்றை
ஐவர்க்குங் காண்டற் கரியமருந்து
என்பற்றிலோங்கு மருந்து - என்னை
இன்பநிலையி லிருத்து மருந்து. (ஞான)

என்குருவான மருந்து - என்றும்
என்றெய்வமாகி யிருக்கு மருந்து
என்னன்னை யென்னுமருந்து - என்றும்
என்றந்தையாகிய வின்ப மருந்து. (ஞான)

என்பெருவாழ்வா மருந்து - என்றும்
என்செல்வமாகி யிருக்கு மருந்து
என்னுயிர்நட்பா மருந்து - எனக்
கெட்டெட்டு சித்தியு மீந்த மருந்து. (ஞான)

உள்ளத்தினுள்ளா மருந்து - என்ற
னுயிருக்கனாதி யுறவா மருந்து
தெள்ளத்தெளிக்கு மருந்து - என்னை
சிவமாக்கிக் கொண்ட சிவாய மருந்து. (ஞான

கற்பூரச்சோதி மருந்து - பசுங்
கற்பூர நன்மணங் காட்டுமருந்து
பொற்பூவினேங்கு மருந்து - என்றற்
போதந்தவிர்த்த சிற் போதமருந்து. (ஞான

மலையிலக்கான மருந்து - என்றன்
மறப்பைத்தவிர்த்த மெய்வாழ்க்கை மருந்து
கலைநலங்காட்டு மருந்து - எங்குங்
கண்ணாகிக்காணுங் கனத்த மருந்து. (ஞான

தன்னையளித்த மருந்து - என்றுஞ்
சாகாநல்வரந் தந்த மருந்து
பொன்னடியீந்த மருந்து - அருட்
போனகந்தந்த புனித மருந்து. (ஞான

சுட்டப்படாத மருந்து - என்றன்
றூக்கமுஞ் சோர்வுந் தொலைத்த மருந்து
எட்டுதற்கொண்ணா மருந்து - நான்
எட்டிப்பிடிக்க விசைந்த மருந்து. (ஞான

மலமைந்து நீக்குமருந்து - புவி
வானண்டமெல்லாம் வளர்க்கு மருந்து
நலமிக்கருளு மருந்து - தானே
நானாகித்தானாகும் காட்டும் மருந்து. (ஞான

---

## கீர்த்தனைகள்.

### பல்லவி.

இதுநல்ல தருணம்—அருள்செய்ய
இதுநல்ல தருணம்

### அனு பல்லவி.

பொதுநல்லநடம் வல்ல புண்ணியரே கேளும்
பொய்யேதுஞ் சொல்கிலேன் மெய்யே புகல்கின்றேன். (இ)

### சரணங்கள்.

மதித்தசமய வழக்கெல்லா மாய்ந்தது
வருணாச்சிரமமெனு மயக்கமுஞ் சாய்ந்தது
கொதித்தலோகாசாரக் கொதிப்பெல்லா மொழிந்தது
கொலையுங்களவு மற்றைப்புலையு மழிந்தது. (இது)

குறித்தவேதாகமக் கூச்சலு மடங்கிற்று
கொதித்தமன முருட்டுக்குரங்கு முடங்கிற்று
வெறித்தவெவ் வினைகளும் வெந்து குலைந்தது
விந்தைசெய்கொடு மாயைச்சந்தையுங் கலைந்தது.(இது)

கோபமுங் காமமுங் குடிகெட்டுப் போயிற்று
கொடியவோ ராங்காரம் பொடிபொடி யாயிற்று
தாபமுஞ் சோபமுந் தான்றானே சென்றது
தத்துவமெல்லா மென்றன்வச நின்றது. (இது)

கரையாவெனது மனக்கல்லுங் கரைந்தது
கலந்துகொளற் கென்கருத்தும் விரைந்தது
புரையாகிலேயி லென்புத்தியுந் தங்கிற்று
பொய்ப்படாக்காதல் ததும்பிமேற் பொங்கிற்று.(இது)

---

பல்லவி.

என்னபுண்ணியஞ் செய்தேனோ—அம்மா நான்
என்னபுண்ணியஞ் செய்தேனோ

அனுபல்லவி.

மன்னர்நாதரம் பலவர்வந்தார் வந்தாரென்று திருச்
சின்னநாத மென்னிரண்டு செவிகளினுட் சொல்கின்றதே.
(என்ன)

சரணங்கள்.

பொருணான்முகனுமாலுந் தெருணன் மறையுநாளும்
போற்றுஞ்சிற்றம்பலத்தே யேற்றுமணிவிளக்காய்
அருணடைகம்புரியுங்கருணைநிதியருன்னை
யாளவந்தார் வந்தாரென் றெக்காளநாதஞ் சொல்கின்றதே.
(என்ன)

பாடியநல்லோர்தமக்கேநாடியதெல்லாமளிப்பார்
பத்திவலையுட்படுவார் சத்தியர்நித்தியர்மன்றில்
ஆடியபொற்பாதர்வேதந் தேடியசிற்போதருன்னை
அணையவந்தார்வந்தாரென்றே யிணையில்நாதஞ் சொல்கி
ன்றதே. (என்ன)

எந்தரமுட்கொண்டஞான சுந்தரரென்மணவாள
ரெல்லாஞ்செய்வல்லசித்தர் நல்லோருளத்தமர்ந்தார்
மந்திரமாமன்றிலின்பந் தந்த நடராசருன்னை
மருவவந்தார்வந்தாரென்று தெருவில் நாதஞ் சொல்கி
ன்றதே. (என்ன)

ஓதியெந்தவிதத்தாலும் வேதியனுந்தேர்வரியா
ரோங்காரபஞ்சகத்தே பாங்காக நடிக்கின்றார்

ஆதியந்தங்காண்பரிய சோதிசுயஞ்சோதியுன்னோ
டாடவந்தார் வந்தாரென்றே நாடிநாதஞ் சொல்கின்றதே.
(என்ன)

அற்புதப்பேரழகாளர் சொற்பதங்கடந்துநின்று
ரன்பரெலாந்தொழமன்றி னின்பநடம்புரிகின்றோர்
சிற்பரரெல்லாமும் வல்ல தற்பரர் விரைந்திங் குன்னைச்
சேரவந்தார்வந்தாரென் றோங்காரநாதஞ்சொல்கின்றதே.
(என்ன)

ஆரணர் நாரணரெல்லாம் பூரணரென்றேத்துகின்ற
வையர்திருவம்பலவர் மெய்யரெல்லாம் வல்லசித்தர்
காரணமுங் காரியமுந்தாரலரி நீயாகவுன்னைக்
காணவந்தார் வந்தாரென்றே வேணுநாதஞ் சொல்கின்ற
தே. (என்ன)

பாகார்மொழியாள்சிவ மாகாம வல்லிநாளும்
பார்த்தாட மணிமன்றில் கூத்தாடுகின்ற சித்தர்
வாகாவுனக்கேயென்றுஞ் சாகாவரங்கொடுக்க
வலியவந்தார் வந்தாரென்றே வலியநாதஞ்சொல்கின்றதே.
(என்ன)

---

பல்லவி.

வருவாரழைத்துவாடி -வட ஊர்வடதிசைக்கே
வந்தாற்பெறலாம நல்லவரமே.

அனுபல்லவி.

திருவார் பொன்னம்பலத்தே செழிக்குங்குஞ்சிதபாதர்
சிவசிதம்பரபோதர் தெய்வச்சபாநாதர். (வரு)

சரணங்கள்.

சிந்தைகளிக்கக்கண்டு சிவானந்த மதுவுண்டு
தெளிந்தோரெல்லாருந் தொண்டுசெய்யப்பவுரி கொண்டு

இந்தவெளியில் நடமிடத்துணிந்தீரே யங்கே
யிதைவிடப்பெருவெளியிருக்குதென்று விங்கே. (வரு)

இடுக்கிலாமலிருக்கவிடமுண்டு நடஞ் செய்ய
வங்கம்பலமொன்றங்கே யெட்டம்பலமுண் டைய
ஒடுக்கிலிருப்பதென்னவுளவுகண்டுகொள்வீ ரென்
றுண்மையிதுவஞ்சமல்லவும் மேலாணையென்று சொன்
[னல். (வரு)

மெல்லியல் சிவகாமவல்லியுடன் களித்து
விளையாடவுமெங்கள் வினையோடவு மொளித்து
எல்லையிலின்பந்தரவும் நல்லசமயந்தா னீது
இங்குமங்கு நடமாடியிருக்கலாமென்ற போது (வரு)

---

பல்லவி.

இவர்க்குமெனக்கும் பெருவழக்கிருக்கின்றது
என்றும் தீராவழக்குக் காணடி.

அனுபல்லவி.

எவர்க்கும்பெரியவர் பொன்னம்பலத்தே நடம்
இட்டாரெனக்குமாலை யிட்டாரிதோவந்தார். (இவர்)

சரணங்கள்.

அன்றிதோவருகின்றேனென்றுபோனவ ரங்கே
யார்செய்ததடையாலோ விருந்தா ரென்கையிற் சங்கே
இன்றுதங்கையிற்கொண்டேவந்து நிற்கின்று ரிங்கே
யிந்தக்கதவை மூடிஇவர்போவதினி யெங்கே. (இவர்)

அவரவருலகத்தே யறிந்தலர் தூற்றப் பட்டே
னன்றுபோனவரின்று வந்துநிற்கின்றார் கெட்டேன்

இவர் சூதையறியாதே முன்னம்ஏமார்ந்து விட்டே
னிந்தக்கதவைமூடு இனிமையங்கும் போக வொட்டேன். (இவர்).

சின்னவ யதிலென்னைச் சேர்ந்தார் புன்னகை யோடு
சென்றார் தயவாலின்று வந்தாரிவற்கா சீடு
என்னைவிட்டினி யிவரெப்படி போவா ரோடு
இந்தக்கதவைமூடு இரட்டைத்தாட் கோலைப் போடு. (இவர்).

---

பல்லவி.

ஆடிய பாத மன்றாடிய பாதம்
ஆடிய பாதம் நின்றாடிய பாதம்.

சரணங்கள்.

பாடிய வேதங்கள் தேடிய பாதம்
பத்திசெய்பத்தர்க்குத்தித்திக்கும் பாதம்
நாடிய மாதவர் நேடிய பாதம்
நாதாந்தநாட்டுக்கு நாயக பாதம். (ஆடி).

தீராதவல்வினை தீர்க்கின்றபாதம்
தெய்வங்களெல்லாந் தரிசிக்கும்பாதம்
வாராவரமாகி வந்தபொற்பாதம்
வஞ்சமனத்தில் வசியாதபாதம். (ஆடி).

நல்லவ ரெல்லாம் நயக்கின்றபாதம்
நாதமுடிவில் நடிக்கின்றபாதம்
வல்லவர் சொல்லெல்லாம் வல்லபொற்பாதம்
மந்திரயந்திரதந்திரபாதம். (ஆடி).

எண்ணியவாறே யெனக்கருள் பாத
மிறவா நிலையிலிருத்திய பாதம்

புண்ணியர் கையுட்பொருளாகும் பாதம்
பொய்யருளத்திற் பொருந்தாத பாதம். (ஆடி)

ஆறந்தத்துள்ளுமமர்ந்த பொற் பாத
மாதிய னாதியு மாகிய பாதம்
மாறந்தமில்லாவென் வாழ்முதற் பாதம்
மண்முத லெந்தாய் வழங்கிய பாதம். (ஆடி)

அருட் பெருஞ்சோதிய தாகிய பாத
மம்மையு மப்பனு மாகிய பாதம்
பொருட்பெரும் போகம் புணர்த்திய பாதம்
பொன் வண்ணமாகிய புண்ணிய பாதம். (ஆடி)

---

பல்லவி.

அபயம் அபயம் அபயம்

சரணங்கள்.

உபயமதா யென்னுறவாய்ச்சிதம்பர
சபையில நடஞ்செயுஞ்சாமி பாதத்திற்கே. (அபயம்)

எம்பலத்தாலெம்மை யேன்று கொளத்தில்லை
யம்பலத்தாடு மெம்மையர் பாதத்திற்கே. (அபயம்)

குற்றஞ் செயினுங்குணமாகக் கொண்டுநம்
மற்றந்தவிர்க்கு மெம்மப்பர் பாதத்திற்கே. (அபயம்)

எண்ணிய வெண்ணங்களெல்லா முடிக்குநம்
புண்ணியனார்தெய்வப் பொன்னடிப் போதுக்கே. (அபயம்)

சித்தமுமுள்ளமுந்தித்தித்தினிக்கின்ற
புத்தமுதாகிய பொன்னடிப் போதுக்கே. (அபயம்)

---

### பல்லவி.

ஆணிப் பொன்னம் பலத்தேகண்ட காட்சிகள்
அற்புதக்காட்சியடி—அம்மா—அற்புதக்காட்சியடி.

### சரணங்கள்.

சோதிமலையொன்று தோன்றிற்றதிலொரு
வீதியுண்டாச்சுதடி—அம்மா
வீதியுண்டாச்சுதடி. (ஆணி)

வீதியிற் சென்றேனவ்வீதி நடுவொரு
மேடையிருந்ததடி—அம்மா
மேடையிருந்ததடி. (ஆணி)

மேடைமேலேறினேன் மேடைமேலங்கொரு
கூடமிருந்ததடி—அம்மா
கூடமிருந்ததடி. (ஆணி)

கூடத்தை நாடவக் கூடமேலேழ்நிலை
மாடமிருந்ததடி—அம்மா
மாடமிருந்ததடி. (ஆணி)

ஏழ்நிலைக்குள்ளுமிருந்தவதிசயம்
என்னென்று சொல்வனடி—அம்மா
என்னென்று சொல்வனடி. (ஆணி)

ஓர்நிலைதன்னிலொளிர் முத்து வெண்மணி
சீர்நிலமாச்சுதடி—அம்மா
சீர்நிலமாச்சுதடி. (ஆணி)

பாரோர் நிலையிற் கருநீலஞ்செய்ய
பவளமதாச்சுதடி—அம்மா
பவளமதாச்சுதடி. (ஆணி)

மற்றோர் நிலையில் மரகதப் பச்சைசெம்
மாணிக்க மாச்சுதடி—அம்மா
மாணிக்கமாச்சுதடி. (ஆணி)

பின்னோர் நிலையிற் பெருமுத்துவச்சிரப்
பேர் மணி யாச்சுதடி—அம்மா
பேர் மணி யாச்சுதடி. (ஆணி)

வேறோர் நிலையில் மிகும்பவளத்திரள்
வெண்மணியாச்சுதடி—அம்மா
வெண்மணியாச்சுதடி. (ஆணி)

புகலோர் நிலையிற் பொருந்தியபன்மணி
பொன்மணியாச்சுதடி—அம்மா
பொன்மணியாச்சுதடி. (ஆணி)

பதியோர் நிலையிற் பகர்மணியெல்லாம்
படிகமதாச்சுதடி—அம்மா
படிகமதாச்சுதடி. (ஆணி)

ஏழ்நிலைமே லேயிருந்ததோர்தம்ப
மிசைந்த பொற்றம்பமடி—அம்மா
விசைந்தபொற்றம்பமடி (ஆணி)

பொற்றம்பங் கண்டேறும் போதுநான்கண்ட
புதுமை யென் சொல்வனடி—அம்மா
புதுமை யென் சொல்வனடி. (ஆணி)

ஏறும்போதங்கே யெதிர்ந்தவகைசொல
வென்னளவல்லவடி—அம்மா
வென்னளவல்லவடி. (ஆணி)

ஆங்காங்கேசத்திக ளாயிரமாயிர
மாகவந்தார்களடி—அம்மா
ஆகவந்தார்களடி. (ஆணி.)

வந்துமயக்கமயங்காமல் நானருள்
வல்லபம்பெற்றேனடி—அம்மா
வல்லபம் பெற்றேனடி. (ஆணி.)

வல்லபத்தாலந்த மாதம்பத்தேறி
மணிமுடிகண்டேனடி—அம்மா
மணிமுடிகண்டேனடி. (ஆணி.)

மணிமுடிமேலோர் கொடுமுடிநின்றது
மற்றதுகண்டேனடி—அம்மா
மற்றதுகண்டேனடி. (ஆணி.)

கொடுமுடிமேலாயிரத்தெட்டுமாற்றுப்பொற்
கோயிலிருந்ததடி—அம்மா
கோயிலிருந்ததடி. (ஆணி.)

கோயிலைக்கண்டங்கே கோபுரவாயிலிற்
கூசாதுசென்றேனடி—அம்மா
கூசாது சென்றேனடி. (ஆணி.)

கோபுரவாயிலுட் சத்திகள்சத்தர்கள
கோடிபல்கோடியடி—அம்மா
கோடிபல்கோடியடி. (ஆணி.)

ஆங்கவர்வண்ணம்வெள்வண்ணஞ்செவ்வண்ணமுன்
ஐவண்ணமாகுமடி—அம்மா
ஐவண்ணமாகுமடி. (ஆணி.)

அங்கவரெல்லாமிங் காரிவரென்னவு
மப்பாலே சென்றேனடி—அம்மா
அப்பாலேசென்றேனடி. (ஆணி.)

அப்பாலேசென்றேனங்கோர் திருவாயிலில்
ஐவரிருந்தாரடி—அம்மா
ஐவரிருந்தாரடி. (ஆணி.)

மற்றவர்நின்றுவழிகாட்டமேலோர்
மணிவாயிலுற்றேனடி—அம்மா
மணிவாயிலுற்றேனடி. (ஆணி.)

எண்ணுமவ்வாயிலிற் பெண்ணோடாணுக
இருவரிருந்தாரடி—அம்மா
இருவரிருந்தாரடி. (ஆணி.)

அங்கவர்காட்ட வணுக்கத்திருவாயில்
அன்போடுகண்டேனடி—அம்மா
அன்போடுகண்டேனடி. (ஆணி.)

அத்திருவாயிலி லானந்தவல்லியென்
னம்மையிருந்தாளடி—அம்மா
அம்மையிருந்தாளடி. (ஆணி.)

அம்மையைக்கண்டே னவளருள்கொண்டேன்
அமுதமுமுண்டேனடி—அம்மா
அமுதமுமுண்டேனடி. (ஆணி.)

தாங்குமவ ளருளாலேநடராஜர்
சந்நிதிகண்டேனடி—அம்மா
சந்நிதிகண்டேனடி. (ஆணி.)

சந்நிதியிற்சென்றுநான் பெற்றபேறது
சாமியறிவாரடி—அம்மா
சாமியறிவாரடி. (ஆணி)

---

வானத்தின்மீது மயிலாடக்கண்டேன்
மயில்குயிலாச்சுதடி—அக்கச்சி
மயில்குயிலாச்சுதடி.

துள்ளலைவிட்டுத் தொடங்கினேன்மன்றுடும்
வள்ளலைக்கண்டேனடி—அக்கச்சி
வள்ளலைக்கண்டேனடி.

சாதிசமயச்சழக்கை விட்டேனருட்
சோதியைக்கண்டேனடி—அக்கச்சி
சோதியைக்கண்டேனடி.

பொய்யையொழித்துப் புறப்பட்டேன்மன்றுடும்
ஐயரைக்கண்டேனடி—அக்கச்சி
ஐயரைக்கண்டேனடி.

---

## நாமாவளி.

அம்பலத் தரசே யருமருந்தே
யானந்தத்தேனே யருள்விருந்தே. (1)
பொதுநடத் தரசே புண்ணியனே
புலவரெலாம்புகழ் கண்ணியனே. (2)
சிவசிவ சிவசிவ சின்மய தேஜா
சிவசுந்தர குஞ்சித நடராஜா. (3)
மலைதரு மகளே மடமயிலே
மதிமுக வமுதே யிளங்கு லே. (4)

ஆனந்தக் கொடியே யிளம்பிடியே
யற்புதத் தேனே மலைமானே. (5)

படன விவேக பரம்பர வேதா
நடன சபேச சிதம்பர நாதா. (6)

அரிபிர மாதியர் தேடிய நாதா
அரகர சிவசிவ ஆடிய பாதா. (7)

அந்தண வங்கண வம்பர போகா
அம்பல நம்பர வம்பிகை பாகா. (8)

அம்பர விம்ப சிதம்பர நாதா
அஞ்சித ரஞ்சித குஞ்சித பாதா. (9)

கருணா நிதியே சபாபதியே
கதிமா நிதியே பசுபதியே. (10)

சகலகலாண்ட சராசரகாரண
சகுணசிவாண்ட பராபரபூரண. (11)

சிதம்பிரகாசா பரம்பிரகாசா
சிதம்பரேசா சுயம்பிரகாசா. (12)

அருட்பிரகாசம் பரப்பிரகாசம்
அகப்பிரகாசம் சிவப்பிரகாசம். (13)

கடப்பிரகாசம் தவப்பிரகாசம்
நவப்பிரகாசம் சிவப்பிரகாசம் (14)

போகஞ் சுகபோகஞ் சிவபோகம் மதுநித்தியம்
ஏகஞ் சிவமேகஞ் சிவமேகம் மிதுசத்தியம். (15)

இக்கரை கடந்திடி லக்கரையே
இருப்பது சிதம்பர சர்க்கரையே. (16)

எண்ணுயி ருடம்பொடு சித்தமதே
இனிப்பது நடராசப் புத்தமுதே. (17)

ஐயர் திருச்சபை யாடகமே
ஆடுத லானந்த நாடகமே. (18)

உத்தர ஞான சிதம்பரமே
சித்தி யெலாந்தரு மம்பரமே. (19)

அம்பல வாசிவ மாதேவா
வம்பலவா விங்கு வாவாவா. (20)

நடராச னெல்லார்க்கு நல்லவனே
நல்ல வெலாஞ்செய வல்லவனே. (21)

ஆனந்த நாடகங் கண்டோமே பர
மானந்த போனகங் கொண்டோமே. (22)

சங்கர சிவசிவ மாதேவா
எங்களை யாட்கொள வா வா வா. (23)

அரகர சிவசிவ மாதேவா
அருளமு தந்தர வாவாவா. (24)

நடன சிகாமணி நவமணியே
திடன கமாமணி சிவமணியே. (25)

நடமிடு மம்பல நன்மணியே
புடமிடு செம்பல பொன்மணியே. (26)

உவட்டாது சித்திக்கு முள்ளமுதே
தெவிட்டாது தித்திக்குந் தெள்ளமுதே. (27)

நடராச வள்ளலை நாடுதலே
நன்றொழில் வாம்விளை யாடுதலே. (28)

அருட்பொது நடமிடு தாண்டவனே
யருட்பெருஞ் சோதியென் னாண்டவனே. (29)

நடுநாடி யிடைநாடி நடமாடு நலமே
நடராஜ நடராஜ நடராஜ பலமே. (30)

அஞ்சலஞ்ச லென்றுவந்தெ னெஞ்சமர்ந்த குழகனே
வஞ்சநஞ்ச முண்டகண்ட மன்றுள்நின்ற வழகனே. (31)

தொண்டர்கண்டு கண்டுமொண்டு கொண்டுளுண்ட வின்பனே
அண்டரண்ட முண்டவிண்டு தொண்டுமண்டு மன்பனே. (32)

பாசநாச பாபநாச பாதநேச வீசனே
வாசவாச தாசர்நேச வாசகாச பேசனே. (33)

அம்போ ருகபத அரகர கங்கர
சம்போ சிவசிவ சிவசிவ சங்கர. (34)

நடராச மாணிக்க மொன்றதுவே
நண்ணுத லாணிப்பொன் மன்றதுவே. (35)

நடராச பலமது நம்பலமே
நடமாடு வதுதிரு வம்பலமே. (36)

நான்சொன்ன பாடலுங் கேட்டாரே
ஞான சிதம்பர நாட்டாரே. (37)

பலத்திற்றன்னம் பலத்திற்பொன்னம் பலத்திற்றுன்னு நலத்தனே
பதத்திற்பன்னும் பாத்திற்றுன்னும் பாத்தின்மன்னுங் குலத்தனே. ()

நீயென்னப்ப னல்லவா நினக்குமின்னுஞ் சொல்லவா
தாயின்மிக்க நல்லவா சர்வசித்தி வல்லவா. (39)

சூதுமன்னு மிந்தையே சூடலென்ன விந்தையே
கோதுவிண்ட சிந்தையே கோயில்கொண்ட தந்தையே. (40)

அன்புமுந்து சிந்தையே யம்பலங்கொள் விந்தையே
இன்பமென்ப னெந்தையே யெந்தைதந்தை தந்தையே. (41)

ஞானசித்தி புரத்தனே நாதசத்தி பரத்தனே
வானமொத்த தரத்தனே வாதவித்தை வரத்தனே.

ஆதிநீதி வேதனே யாடனீடு பாதனே
வாதிஞான போதனே வாழ்கவாழ்க நாதனே. (43)

இனித்துயர் படமாட்டேன் விட்டேனே
யென்குருமே லாணை யிட்டேனே. (44)

இனிப்பாடு படமாட்டேன் விட்டேனே
யென்னப்பன்மே லாணை யிட்டேனே. (45)

சன்மார்க்கம் நன்மார்க்கம் நன்மார்க்கம்
சகமார்க்கந் துன்மார்க்கந் துன்மார்க்கம். (46)

நடராசர் பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார் பாட்டெல்லாம் வெறும்பாட்டு. (47)

சிதம்பரப் பாட்டே திருப்பாட்டு
ஜீவர்கள் பாட்டெல்லாந் தெருப்பாட்டு. (48)

அம்பலப் பாட்டே யருட்பாட்டு
அல்லாத பாட்டெல்லா மருட்பாட்டு. (49)

நாதபரம் பரனேபர நாத சிதம்பரனே
நாததிகம் பரனேதச நாத சுதந்தரனே. (50)

ஞான நடத்தவனே பர ஞான விடத்தவனே
ஞான வரத்தவனே சிவ ஞான புரத்தவனே. (51)

ஞான சபாபதியே மறை நாடு சதாகதியே.
தீன தயாநிதியே பர தேவி யுமாபதியே. (52)

நீடிய வேதந் தேடிய பாதம்
நேடிய கீதம் பாடிய பாதம்
ஆடிய போதங் கூடிய பாதம்
ஆடிய பாதம் ஆடிய பாதம். (53)

தருவளர் நிழலே நிழல்வளர் சுகமே
தடம்வளர் புனலே புனல்வளர் கலனே
திருவள ருருவே யுருவளரு யிரே
திருநட மணியே திருநட மணியே. (54)

அம்பலத்தி லெங்களைய ராடியநல் லாட்டம்
அன்பொடு துதித்தவருக் கானதுசொல் லாட்டம்
வம்புசொன்ன பேர்களுக்கு வந்ததுமல் லாட்டம்
வந்ததலை யாட்டமன்றி வந்ததுபல் லாட்டம். (70)

நாத்திகஞ்சொல் கின்றவர்தம் நாக்குமுடை நாக்கு
நாக்குருசி கொள்ளுவதும் நாறியபிண் ணாக்கு
சீர்த்திபெறு மம்பலவர் சீர்புகன்ற வாக்கு
செல்வாக்கு நல்வாக்கு தேவர்திரு வாக்கு. (71)

அருட்பெருஞ் சோதியைக் கண்டேனே
ஆனந்தத் தெள்ளமு துண்டேனே
இருட்பெரு மாயையை விண்டேனே
எல்லாஞ்செய் சித்தியைக் கொண்டேனே. (72)

திருச்சிற்றம்பலம்.

---

## குடும்பகோஷம்.

### காப்பு.

பூவுலகும் பொன்னுலகும் புகழ்தவத்திற்
பெரியருளம் புனித மான
தேவுலகென் றமர்ந்தருளுஞ் சிவகளிற்றை
யைந்துகரத் தெய்வந் தன்னை
மூவுலகுந் துதியாறு முகத்தமுதை
யெங்குருவை முக்கட் கோவை
நாவுலகு நயப்பெய்த வழுத்தியெம
துறவினையி னவைக டீர்ப்பாம். (1).

சீர்பாட்டிற் சிறந்தசிவ குருவேயிக்
குடும்பத்தின் றிறம்பா டற்கே

யோர்பாட்டிற் கொருகோடிப் பசும்பொன்வரு
மானாலு முன்பே ரன்றிப்
பார்பாட்டிற் சிறுதெய்வப் பேர்களைமுன்
னிலைவைத்துப் பாடே னிந்த
நேர்பாட்டிற் பிழைகுறியே லருட்செவிக்கேற்
பித்தலரு ணிலைமை யன்றே. (2)

குருதரிசனப் படலம்.

ஒருநாளி லொருமகனோர் பதினாறுண்
டகவைநல முடையா னொற்றித்
திருநாளி லெம்பெருமான் றியாகேசன்
றிருப்பவனிச் சேவை செய்து
மருநாள மலர்த்தடஞ்சூழ் தெற்றிலொரு மடல்
வாச்சிரம வனந்துட் போந்து
கருநாளின் கரிசறுக்குங் குருநாத
னிருக்கையெதிர் கண்டா னன்றே. (3)

கண்டவனக் குருநாதன் கடைக்கணிக்கப்
பெற்றதனாற் கடத்திற் சந்திர
னிண்டகுதே நிடச்சிறிது தெளிநீர்போற்
றெளிந்தறிவு சிறிது தோன்றத்
தண்டமெனக் கீழ்விழுந்து வணங்கியெதிர்
நின்றுகரந் தலைமேற் கூப்பிப்
பண்டுறுமன் பொங்கிவிழிக ணீர்சொரிய
வியந்துதுதி பண்ணு வானும் (4)

கருணைநெடுங் கடலென்கோ கல்லாலி
னடியமர்ந்த கடவு ளென்கோ
வருணகிரிக் கருள்புரிந்த வாறுமுகக்
குருவென்கோ வமுத மென்கோ

மருணலிய வரும்பிறவி மருந்தென்கோ
வடியேன்கண் மணியென் கோமெய்த்
தெருணிறைந்த சிவகுருவே நின்றனையீண்
டெவ்வாறு சிந்திக் கேனே. (5)

என்றுனைக் கருணையொடுஞ் சிவகுருவங்
கெதிர்நோக்கி யிளையோ யுன்றன்
னன்றான சரிதமெது நவிலுதியென்
றுரைத்தருள ஞான யோகங்
குன்றாத குணக்குன்றே குறையாத
குளிர்மதியே குருவே யென்றும்
பொன்றாத நிலையருள்வோய் கேட்டருள்க
வெனவணங்கிப் புகல்வான் மாதோ. (6)

கற்றவர்சூ ழித்தலத்துக் கைங்கடிகை
யெல்லைதனிற் கவின்சேர் சென்னை
யுற்றடியே னிருக்குமூர் சூத்திரர்தங்
குலத்தாசை யுடையா னென்னைப்
பெற்றவன்பேர் வினைச்சியெனைப் பெற்றவள்பே
ரெனக்குமுன்னே பிறந்தார் மற்றுஞ்
சுற்றமிக வுடையேன்சஞ் சலனெனும்பே
ரென்பெயராச் சொல்வ ராலோ. (7)

குடிப்பேறிற் றுய்மூலப்பா லேழாண்டு
மட்டுமிகக் குடித்து நாக்குத்
தடிப்பேறிற் றுதலினுற் படிப்பேறிற்
றிலையடியேன் றனக்குக் கல்விப்
பிடிப்பேறிச் சிறியேன்முன் பிறந்தவர்தம்
பெயரெழுதப் பெரிதுங் கற்று
நடிப்பேறி னாரவர்முன் னெடிப்பேற
நின்றேனிந் நாயி னேனே. (8)

பெருஞ்செல்வப் பெருக்கத்திற் பிறந்தேனுன்
பிள்ளையாப் பிறந்த நாளதொட்
டிருஞ்செல்வத் திருநாண்மட் டயல்வேறு
குறைசிறிது மிலலை யெந்தா
யருஞ்செல்வ மெனுங்கல்வி யறிவில்லாக்
குறையொன்றே யடைந்திட் டேனவ்
வருஞ்செல்வத் தாசையுளேன் போடிமணை
நாடிமனம் வருந்தல போன்றே. (9)

இன்னவகை யுழல்கின்றே னிக்காலத்திற்
றிருநாளென் றிசைக்கக் கேட்டிங்
கென்னனைய சிறுவர்களோ டெயதினேன்
றிருப்பவனி யினிது கண்டேன்
பின்னரென துடனுற்றோர் பிரிந்தனர்நா
யடியேன்முன் பிறப்பிற் செய்த
தன்னனைய தவப்பயனாற் றேவரின்
றிருச்சமுகந் தரிசித் தேனே. (10)

ஈதெனது சரிதமொரு தெய்விகத்தாற்
களர்நிலத்தி னிடையே செந்நெற்
பேதமற முளைத்ததுபோற் றேவரின்
றிருச்சமுகப் பெருமை யாலே
மூதறிவு சிறிதென்னுண் முளைத்ததது
பயிராக முழுதுங் கலவிக்
காதலுறு சிறியேனைக் காத்தருள
வேண்டுமெனக் கழறி னானே. (11)

அன்னவன்சொன் மொழிகேட்டுச் சிவகுருவன்
கிளநிலா வருமப வுன்னோ
புன்னகைகொண் டுள்ளகத்திற் புரிந்ததுகன்
ருயினுமிப் போது நீயுன்

மன்னகருக் கேகியவண் டந்தைதாய்க்
குரைத்தவர்சம் மதம்பெற் றீண்டித்
தொன்னகருக் கெய்துதியென் றுரைத்தருளச்
சஞ்சலன்கை தொழுது சொல்வான். (12)

வேர்ப்புலகின் புவப்புறுமென் றந்தைதாய்
சம்மதத்தை வேண்டி மீண்டே
யார்ப்புலவாச் சென்னைநக ரடைந்தேனேற்
பெருங்குகையி லமர்ந்த செங்கட்
போர்ப்புலியைப் பார்த்துவரப் போனகதை
யாய்முடியும் பொருளா யென்னைச்
சேர்ப்புடைய குருமணியே யென்செய்கே
னறிவறியாச் சிறிய னேனே. (13)

கண்பாரென் றயர்ந்துபணிந் தழுதிருகண்
ணீர்சொரியக் கலங்கி னானை
நண்பார்மெய்க் குருநாத னோக்கியிவ
ணிருந்திடநீ நயப்பா யப்பா
பண்பாரிங் குறுமவர்தாம்பிச்சைச்சோ
றுச்சியிலே பரிந்து வாங்கி
யுண்பார்மற் றவ்வகைநீ யுண்ணுதியோ
வுண்ணுதியே லுறைதி யென்றான். (14)

உச்சியிலே பிச்சையெடுத் துண்பதுவோ
பெரிதெளியேற் கோவா தோடிக்
கச்சியிலே பிச்சைகொண்டு காசியிலே
நீராடிக் கடிது போகிக்
கொச்சியிலே செபமுடித்துக் கொங்கணத்தி
லேபுசித்துக் கொள்ளென் றாலும்
மெச்சியுனை மிகமகிழ்ந்து செய்வேனென்
றனையையா விட்டி டேலே. (15)

புல்லமுதே நல்லமுது புரைக்குடிலே
புனைமாடம் புடைக்கும் பாறைக்
கல்லனையே மெல்லணைநாட் கழிந்தபழங்
கந்தையே கலையென் றுளு
மல்லலுறே னரசேநின் சொல்லமுதுண்
டருந்தவமா டத்தே வைகி
யொல்லுமனே திடவணைகொண் டருட்போர்வை
போர்த்துநல முடுக்கின் மாதோ. (16)

எவ்வகைநின் றிருவுளப்பாங் கிருப்பதெனி
யேனளவி லெந்தா யெந்தா
யவ்வகைநின் றிடச்சிறிது மஞ்சேனென்
றனைவிடே லாள்க வென்றே
யிவ்வகையிற் பலபகர்ந்து விழுந்திறைஞ்சி
யெழுந்திரா திருகண் ணீரால்
செவ்வகையிற் குருநாதன் றிருவடிக்கீழ்
நிறையாறு செய்தான் மன்னே. (17)

---

முயற்சிப்படலம்.

மேலையிலே படுத்திருந்த வெஞ்சுடரோன்
குணபாலின் விழித்துப் பூவோர்
வேலையிலே முயலுறக்கீழ் வேலையிலே
யெழுவதற்கு மேவு மாதி
காலையிலே யெழுந்தேகிக் கங்கையிலே
மிக்கதெனக் கருதி மேலோ
ரோலையிலே பொறித்தகங்கி யோடையிலே
தெய்வகன்னி ரோடி யாடி. (1)

தொழுந்தகைய முனிவாருஞ் சுராருமிகத்
தொழுதேத்தத் துலங்குந் திங்கட்
கொழுந்தசையச் சடையசையக் கூத்தாடிக்
கொண்டேயெங் கோமா ஞரு
மெழுந்தருளும் பெருஞ்செல்வத் திருமாட
வீதிதனை யிறைஞ்சி யேத்தி
யழுந்தியசற் பத்தியுடன் மூன்று முறை
வலஞ்செய்தங் கதற்குப் பின்னர். (19)

உளந்தெளிந்து விளங்குகின்ற வுத்தமர்செய்
தவமேபோ லோங்கி வான
மளந்ததிருக் கோபுரங்கண் டஞ்சலிசெய்
திறைஞ்சிமுகி லாதி சூடி
யிளங்கதிர்வெண் டிங்களணி யெம்பெருமான்
சடைமுடிபோ லிலங்குந் தூய
வளங்கெழுமோர் திருமதிலை யைந்துமுறை
வலமாக வந்து மாதோ. (20)

அம்பொடித்துப் பகைதுறக்குங் கயமுகனைக்
கருணையினு லாளும் வண்ணங்
கொம்பொடித்து விசியவன் கோளொடித்துக்
கோலொடித்துக் கோதில் விண்ணோர்
வம்பொடித்து வாழ்வித்த வானைமுகப்
பெருமானை வணங்கித் தன்றே
கம்பொடித்துக் கைகுவித்துக் கருத்துருகிக்
கண்களினீர் காண நின்றே. (21)

தடையுடைக்குந் தனிமுதலே தண்ணமுதே
யெங்கள்பெருந் தகையே யோங்கி

மடையுடைக்குங் பெருங்கருணை மதமலையே
யானந்த மலையே யுள்ளத்
திடையுடைக்குந் துயர்நீக்கி யின்பளிக்கு
மைந்துகரத் திறையே மாயைக்
கடையுடைக்குங கழற்புனைதாட் கணபதியே
போற்றியெனக் கனிந்து மன்னோ. (22)

வனனிதனை மருவாத மாதவரு
மாலயனும் வணங்கிப் போற்றுஞ்
சந்நிதியைச் சார்ந்துவிழி யானந்த
நீர்வெள்ளந் ததும்பப் பலகா
லன்னிதிபெற் றிடப்பணிந்து கரங்குவித்துப்
படம்பக்க நாத னென்னுஞ்
செந்நிதியிற் பரஞ்சுடரைப் பொனனிதிகண்
டவன்போற்கண் செழிக்கக் கண்டு. (23)

உடன்முழுதும் புளகமெழ வுளமுழுது
முருக்கமெழ வுவந்தா னந்தக்
கடன்முழுதுங் கண்களெழக் கரசரணங்
கம்பமெழக் கருத்தி னோடு
மடன்முழுது மெழமலர்ந்த மலரின்முக
மகிழ்ச்சியெழ மலிந்த பாசத்
திடன்முழுது மகன்றன்பே வடிவாக
நின்றுதுதி செய்வான் மாதோ. (24)

உடையானே யெவ்வுயிர்க்கு மொருமுதலே
யிளம்பிறைகொண் டோங்குங் கங்கைச்
சடையானே யன்பருளத் தாமரையி
லமர்ந்தபெருந் தகையே வென்னை

விடையானே மறைமுடிமேல் விளங்கியமெய்ப்
பொருளேமெய் விளங்கார் தம்மை
யடையானே திருவொற்றி யாலயத்தெம்
மரசேநின் னடிகள் போற்றி. (25)

கலைமகளுந் திருமகளுங் கூத்தணிந்த
மங்கலநாண் கழற்றுமன்னை
மலைகடலி னெழுவிடத்தை யடக்கியருண்
மணிமிடற்றெம் பரந்தெய்வ
மலைமகளை யொருபுறம்வைத் தலைமகளை
முடியிட்ட மணியேயெந்
சிலைவளைத்துப் புரமெரித்த செங்கையெம்
பெருமானின் றிருத்தாள் போற்றி. (26)

மறைதேட வயன்றேட மாறேட
வன்பருள மலரிடுமே
யிறையேனும் பிரியாம னிருக்கருளும்
பெருவாழ்வே யிலையென்றுங்
குறையாத குளிர்மதியே குறைவாத
வொளிமணியே குன்றாப்பொற் குன்றே
பொறையாளர் வழுத்துந் திருவொற்றிப் பூங்கோயிற்
பெருமானே போற்றி போற்றி. (27)

எனப்பெரிதுந் துதித்திங்குந் தரிசியாடுகின்ற
பெருமான்முன் னெதிர்த் தூக்கும்
வனப்புடைய மலர்ப்பதமாமாதைதனை
மிதித்தூன்று மலர்ப்பாற் றுளு
மனப்பருவ மலர்மலரக் கண்குளிரக்
கண்டுமிக வணங்கிப் போகா
வினப்பெரியார்க் கின்பருளுந் கூத்துடைய
மாமணியே யின்பவாழ்வே. (28)

காரணமுக் கண்கொளுஞ்செங் கரும்பேசெங்
கனியேயென் கண்ணே மேலை
யாரணத்துட் பொருளாகி யனைத்துமா
யாதொன்று மல்லா தாகிப்
பூரணமின் மயவெளியிற் சச்சிதா
நந்தநடம் புரியுந் தேவே
யோரணவு நடராயப் பெம்மானே
யெம்மானே யென்று வாழ்த்தி. (29)

சடையாடச் சடைமீதிற் சலமகளு
மிளமதியுந் ததும்பக் கொன்றைத்
தொடையாடக் கருணைவிழிக் கடைததும்பப்
புன்னகையுட் டுலங்க வெள்ளைக்
குடையாட விமயமடக் கொடியாடத்
தனிநெடுமேற் குழங்கை யேவி
யிடையாடப் பவனிவரு மெம்பெருமான்
றியாகனைநீ யிறைஞ்சி நின்று. (30)

இருந்தேபொன் னுளத்திலங்குஞ் செழுஞ்சுடரே
யோவாத வின்ப மேயா
வருந்தேறு நிலைநின்ற வான்பொருளே
பவப்பிணியை மாற்றுந் தெய்வ
மருந்தேயென் கண்ணேகண் மணியேசெம்
மணியேயென் வாழ்வே யெங்கள்
பெருந்தேவே தருந்தியாகப் பெருமானே
கடவுளர்தம் பிரானே போற்றி. (31)

நிலையாய்நின் றுயர்ந்தவர்கட் கருள்புரியும்
பரம்பரையை நிமலை தன்னைத்
தலையாண்மெய் யுறவணங்கி யுலகெல்லா
மளித்தபெருந் தாயே மேருச்

சிலையான்றன் னிடத்தமர்ந்த தெள்ளமுதே
யானந்தத் தேனே மானே
மலையான்றன் னொருமகளே வடிவுடைய
விளங்குயிலே மயிலே போற்றி. (32)

வான்வளர்த்த மலர்க்கொடியே மலைவளர்த்த
மடப்பிடியே மணியே வாசக்
கான்வளர்த்த மலர்க்கோதைக் கனியேமுக்
கனியேபைங் கரும்பே செங்கை
மான்வளர்த்துச் சடையிலிள மதிவளர்த்த
வொருகிழவன் மகிழ வாய்த்த
தேன்வளர்த்த மொழிக்குமரி கௌரியென
மறைபுகழ்மா தேவி போற்றி. (33)

போற்றியெனப் புகழ்ந்துசண்பைப் புனிதமறைக்
குலமணியைப் போந்து போற்றி
நாற்றிசையும் புகழ்கின்ற நாவரசைப்
பணிந்துசிவ ஞானந் தேறித்
தோற்றியவோர் சங்கிலியாற் றுடக்குண்ட
யானைதனைத் தொழுது மாயை
மாற்றியநம் மாணிக்க வாசகப்பொன்
மலையடியை வணங்கி மாதோ. (34)

சீரேன மறியாத திருவடியுங்
குருவடியுஞ் சிந்தித் தேகி
யாரேனுங் கொலைகுறியா ரெமக்குரியா
ரெனவவர்த மில்லந் தோறும்
போரேர்செற் சோறேனும் புதுக்கஞ்சி
யேனுமன்றிப் புளித்த காடி
நீரேனுங் கூழேனுங் கிடைத்ததுகை
யேற்றுவந்து நின்று வாங்கி (35)

அங்குருவின் றகைதெரிக்கு மாச்சிரமத்
திடையணுகி யன்பி னோடுந்
தங்குருவி னடிமுடிமண் ணுறவணங்கி
யிருகரமுந் தலைமேற் கூப்பி
யெங்குருவே சிவகுருவே யெழிற்குமர
குருவேயிவ் வெளியேன் றன்பா
லிங்குருவிற் கருணைபுரி திருவாக்கின்
படிபிச்சை யேற்ற தீதால். (36)

எனத்தொழுது நின்றானைக் கருணையொடுங்
கடைக்கணித்தே யிறைவன் கோயிற்
கனத்தபலி புரிந்தனைநின் னினைத்தவுட
லாங்கதனைக் காட்டு கின்ற
தினத்தவரோ டுண்ணுதிபின் பெய்துதியீண்
டெனவுரைப்ப விறைஞ்சி வாழ்த்திச்
சினத்தழவித் தருண்மிகுந்த திருக்கூட்டந்
தனைவணங்கிச் சிந்தித் தேத்தி. (37)

அக்கூட்டந் [illegible]
வினவியவ ரடியிற் றாழ்ந்து
மிக்கூட்டு மன்னையினின் மிகப்பரிவி
னவர்க்கூட்டி மிகுந்த சேடங்
கைக்கூட்டக் காணாதே யாயினுமற்
றதுகுருவின் கழல்க ளேத்தி
மெய்க்கூட்டம் விழைந்தவன்றான் மிகமகிழ்ச்சி
யுடனுண்டு விரைந்து மாதோ. (38)

வாய்பூசிக் கைபூசி வந்துசிவ
குருவினடி வணங்கி நின்றான்
றாய்பூசித் தெதிர்நிற்குந் தனையனைப்பார்த்
துரைப்பதுபோற் றயவா னோக்கிப்

பேய்பூசித் திடுஞ்சிறிய பேதையர்போ
லல்லாது பெரிது மிக்கன்
பாய்பூசித் திறைவனடி வணங்குகின்ற
நல்லோரைப் பணிந்து வாழ்த்தி. (39)

அன்பிரக்க மறிவூக்கஞ் செறிவுமுதற்
குணங்களுற வமைந்து நாளு
மின்புறக்கண் ணுதலான்றன் றிருக்கோயிற்
பணிபுரிந்தீண் டிருக்கு நல்லோர்
துன்பறச்சொல் வழியெந்த வழியந்த
வழிநடந்து துகளில் கல்வி
பொன்புரக்குந் தொழில்வகணிகர் போல்பயில்க
வெனக்குரவன் புகன்றான் மன்னே. (40)

---

திருவருட்பாத்திரட்டு

முற்றிற்று.

# செய்யுள் முதற் குறிப்பகராதி.